# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி – மார்கழி

2020 – டிசம்பர்



பார்வை-புனர்வாழ்வு மையப் பட்டய வகுப்புகள் தொடங்க அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் நா. ராஜேந்திரன் அவர்கள் அனுமதி வழங்கியபோது சுவாமிகள் பெற்றுக்கொண்ட நிகழ்ச்சி

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சார்வரி - மார்கழி

2020 - டிசம்பர் இதழ் - 102

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

சிவகாமசுந்தரி

பூணரிய கமுதிரதம் இந்திரசா லங்கனவிற்

புவனம் கண்டு

காணரிய தமைக்கண்டு சீவரெலாம் தாமேயாய்க்

காணு மாறு

கோணரிய சிதாகாசப் பெருந்தலத்தோர் பொருளியற்று

கூத்துக் காணும்

யாணர்இயல் சிவகாம சுந்தரிபொன் தாமரைத்தாள்

இறைஞ்சி வாழ்வாம்!

*– கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

மனித உள்ளம் மிக்க விசித்திரமானது; மனிதனுடைய பார்வைகளிலும் விதவிதமான வேற்றுமைகள் உள்ளன. தனக்கு ஏற்படுகின்ற சிறு சிக்கல்களையும் துயரங்களையும் பெரிதாக்கி, தான் மட்டுமே சிரமப்படுவதாகத் தன்பால் இறைவன் இரக்கமே இல்லாமல் தொடர்ந்து துன்புறுத்தவதாகவும் மனதில் கற்பனைகளையும் தவறான எண்ணங்களையும் உருவாக்கிக் கொண்டு இடர்ப்படுகிறான். அதே நேரம் பிறருக்கு ஏற்படுகின்ற பெரிய துயரம், தீய நிகழ்வுகளும் இவனைப் பொருத்தமட்டில் சாதாரணமானதாகவும், சிறியதாகவும் கருதுகிறான். அப்படிப்பட்ட துயர்களுக்கு அடுத்தவன் வருந்துவதைக் கண்டு இதற்கெல்லாம் அழலாமா? என்று எள்ளி நகையாடுகிறான். தனக்குத் தோன்றுகின்ற ஆசைகளும் விருப்பங்களும் நியாயமானவை; தனக்குக் கிடைக்க வேண்டியவை என்று எண்ணுகின்ற ஒரு மனிதன் பிறருடைய விருப்பங்களைப் பேராசை என்றும் அதீத ஆசைகள் என்றும் கருதி எள்ளி நகையாடுகிறான்.

வயது அதிகமாக அதிகமாக உடல் நலத்திலும் பலத்திலும் குறைபாடுகளும் தளர்வுகளும் ஏற்படும் என்ற இயற்கை நியதியை ஒப்புக்கொள்ளவும் மனம் மறுக்கிறது; தடுமாறுகிறது.

இந்தச் சூழ்நிலையிலேயே எந்த மனிதனுடைய மனச்சஞ்சலங்களும் கோபதாபங்களும் விருப்பு வெறுப்புகளும் குறைந்து மனம் அமைதி அடைய வேண்டுமெனில் இறைவன் பேரில் உண்மையான பக்தி, அன்பு செலுத்துவதே உரிய வழி ஆகும். பக்தியினாலும் நல்ல சிந்தனைகளாலும் மனம் அமைதி அடைவது மட்டுமின்றி நியாயத்தையும், தருமத்தையும் நம் மனம் உணர்ந்து செயல்படத் துவங்கும்.

பக்தி முறைகளிலே எவ்வழியைக் கடைப்பிடித்தாலும் உள்உறை அன்பே மேன்மையான நெறியாகும். அப்படிப்பட்ட அன்பின் திறத்தாலே திண்ணமாக நல்ல வாழ்க்கை நெறிமுறை பக்தனுக்கு அமையும். அதன்படி உள்ளம் தூய்மையாகும். ஆன்மீக சிந்தனை,

தன்னைத் தான் அறிய வேண்டும் என்கிற ஆர்வம் மேன்மேலும் நல்ல விஷயங்களைக் கேட்க வேண்டும், கற்க வேண்டும் என்கிற விருப்பம் யாவும் திண்ணமாக அதிகமாகும், இயல்பான நெறிமுறையாலே பக்தியும் ஞானமும் சித்திக்கும்.

இறைவனுக்கும் பக்தனுக்கும் உள்ள தொடர்பு பற்றிய பாடல்கள் தமிழிலே பதினாறாயிரக் கணக்கிலே உள்ளன. தமிழ்ப் பக்தி இலக்கியங்களிலே பாடல்கள் எண்ணிக்கை அளவிலே மிக அதிகமாகும். உலகிலேயே பக்திப் பாடல்கள் அதிகம் கொண்ட மொழி தமிழ்மொழியே ஆகும். அப்படிப்பட்ட பல்லாயிரக் கணக்கான பாடல்களிலே அப்பர் பெருமானுடைய திருவாக்கு ஒன்று மிகமிகச் சிறந்தது. இறைவனும் பக்தரும் ஐக்கியமாகின்ற உச்சக்கட்டத்தைத் தெளிவாகவும் மென்மையாகவும் தெரிவிக்கின்ற பாடல் அதுவாகும். நாயகன் நாயகி பாவத்திலே எழுதப்பட்ட பலநூறு பாடல்களுக்கிடையே இதுவே தலையானது ஆகும். இதை நன்கு ஆறஅமர அமர்ந்து படித்துத் தெளிந்தோமானால் இறைவனுக்கும் பக்தனுக்கும் உள்ள உறவும் அதனுடைய உயர்வும் நன்கு விளங்கும்.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை;
தன்னை மறந்தாள்தன் நாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.

இந்த அற்புதமான சிவஜீவ ஐக்கியப் பாடலைக் கேட்டுப் படித்து இன்புறுக. பக்தி வழியில் நடக்க முயல்க. யாவருக்கும் ஆசிர்வாதங்கள்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## பஜகோவிந்தம்

(திருமதி. விசாலாட்சி மெய்யப்பன்)

முழுவதும் பெண்ணை நினைத்தாய்

முதுமை வந்ததும் கவலைப்படுகிறோம் கிருஷ்ணா

எப்போது நினைக்கப் போகிறாய்

யார் உன் மனைவி யார் உன் பிள்ளை

எதுவரை குடும்பம் உன்னிடம் இருக்கிறது

எங்கிருந்து நீ இங்கு வந்தாய் என்றே

சிந்தித்து உண்மை தெரிந்து கொள்வாய்

ஞானிகள் சேர்க்கை பாசத்தை அறுக்கும் பாசம்

அறுந்தால் ஆசைகள் அகலும்

ஆசைகள் அகன்றால் உறுதி உண்டாகும் உறுதி

உண்டானால் முக்தி நிச்சயம்

முதுமை வந்தபின் காதல் ஏது வற்றிய குளத்தில்

தண்ணீர் ஏது?

ஏழைகள் வாழ்வில் உறவினர் ஏது ஞானம்

கிடைத்தபின் குடும்பம் ஏது

இளமையும் செல்வமும் அகந்தையைக்

கொடுக்கும் காலம் இளமையை

மெதுவாய் கரைக்கும் மாயங்கள் நிறைந்த

உலகினை மறந்த மாயவன்

பாசத்தை மனதில் நிறுத்து

தினம் தினம் காலையும் பகலும் இரவும்

வருடங்கள் தோறும் வசந்த காலம்

தினம் தினம் வாழ்க்கை கரைந்து போகிறது

மனமோ ஆசையில் புரண்டு அலையுது.

## சசிவன்ன போதம் (தொடர்ச்சி)

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

61. முன்ஆ கஉடம்பு அதுசித் தம்அதே
முடிவாக மொழிந்த பொருள்தி ரள்தான்
நின்ஆ கிலநீ அறியும் பொருளாய்
நிகழ்கின் றதனால் எனநின் மலனே.

உடல் உறுப்புகள் அனைத்தும் பற்றிச் சிந்தித்தால் அந்தக் கரணங்கள் சித்தம் தெளிந்து இவை அனைத்தும் உன்னாலே அறியப் படக்கூடிய விஷயங்கள் ஆகும். இந்த ஏழும் நீ அல்ல ஆன்மா அல்ல, உன்னால் அறியப் படக்கூடிய பொருள்கள் ஆன்மாவாக இருக்க முடியாது. மேலே சொன்ன எதுவும் நீ அல்ல என்று நந்திபராயணர் சசிவன்னனுக்கு உரைத்தார். (காரிய உபாதிகள்) - தேகம், இந்திரியங்கள், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவையாவையும் நான் அல்ல; ஆன்மா அல்ல.

62. உன்னால் அறியப் படும்யா வையும்உன்
உருவென்று எனஓ தினைஒக் கும்எனக்கு
என்னால் அறியாது ஒழியும் பொருளோ
யான்ஆ குவதுஎன் றனுமே.

சசிவன்னன் குருநாதனுடைய உபதேசங்களைக் கேட்டு, தன்னால் கிரகித்துக் கொள்ள இயலாதவற்றைக் குருவிடம் விளக்கிக் கூறுமாறு வேண்டுகிறான். குருமகானே உன்னால் உரைக்கக்கூடிய எப்பொருளும் எனது சொரூபம் அல்ல ஆன்மா அல்ல என்று உபதேசித்தீர்கள், நான் ஒப்புக் கொள்கிறேன். என்னாலே உணரப்படாத, அறிய முடியாத நான் என்னும் பொருள் வேறு ஏதேனும் உண்டோ எனக்குப் புரியும் வண்ணம் விளக்கிச் சொல்லுங்கள் என்று பணிவோடு வேண்டினான்.

63. அறியாப் பொருள்கா ரணமா யைகுறித்து
அறியும் பொருள்கா ரியமாம் உலகுஇந்
நெறியால் திகழ்நான் மறைஅந் தம்எலாம்
நீஅன்று எனவோ துறிரந் தரமே.

நம்மாலே சுட்டிக் காட்டி அறிய முடியாத பொருள்கள் பலவுண்டு;

அவை இந்த ஜகத் உருவாவதற்குக் காரணமான மாயையின் செயலாகும். சுட்டி அறியக் கூடிய பொருள்கள் யாவும் காரியம் ஆகிய உலகம் ஜகத் ஆகும்(காரணம் - பிரம்மம் - மாயை) காரணமாகிய மாயையைச் சாதாரண ஜீவர்களால் அறிந்து கொள்ள முடியாது. நான்கு வேதங்கள், உபநிஷத்துகள் அனைத்தும் அறியக் கூடிய பொருளாகிய காரியம் அனைத்தும் ஆன்மாவாக முடியாது என்று உறுதிபடச் சொல்கிறார். எனவே காரணம், காரியம் இரண்டும் நீ அல்ல; இரண்டுக்கும் சாட்சியாய் இருக்கின்ற ஆன்மாவே நீ.

**64. அறியும் பொருள் அன்று அறியாப் பொருளன்று**
**அறிவா கியநீ எனும்அப் பொருள்தான்**
**பொறியின் வழிநின்று அறியும் பொருளோ**
**போதக் கண்விழித்து அறியும் பொருளே.**

அறிந்து உணரமுடியாத பொருள்கள் காரணமாயை தொடர்பானது; கேட்டு, கண்டு அறியப்படக்கூடிய பொருள்கள் காரியங்கள், காரணம் கருவி கர்த்தா என மூன்றும் சேர்ந்து இயங்கினால் தான் காரியம் உருவாகும். பிரம்மம் ஆதிகாரணம், மாயை / ஈசன் உபாதன காரணம், கருவி ஈசனுடைய சங்கல்பம் (இந்த ஜகத்தை படைக்க வேண்டும் என்கிற ஈசுவரனுடைய சங்கல்பம்) காரியம் படைக்கப்பட்ட ஜகத். இதற்கு எளிய உதாரணம் மண்பாண்டம், பொம்மை போன்ற மண்ணால் ஆக்கப்பட்ட பொருள்கள் மண்பாண்டம் உருவாவதற்கு ஆதிகாரணம், பிரம்மம் உபாதன காரணம்; ஈசுவரன் / மாயை கர்த்தா குயவன், கருவி சுழல்கின்ற சக்கரம், மரப்பலகை உருவான காரியம் மண்பாண்டம். மண்ணால் செய்யப்பட்ட பொருள்கள் பலவிதம் இருக்கலாம். மண்பாண்டம், சட்டி, குடங்கள், பொம்மை இவையாவையும் காரியம் உருவாகும் காலத்தில் ஏற்பட்ட பேதங்கள், விகற்பங்கள். இப்படி எக்காரியம் செய்யப்பட்டாலும் அது செயல்படுவதற்கு ஒரு ஆதிகாரணம் இருக்க வேண்டும்; காரணத்திற்கும் காரியத்திற்கும் இடையே பேதங்கள் இருக்க முடியாது. காரியங்களுக்குள்ளே வேறுபாடுகள் இருக்கலாம்; எனினும் யாவும் காரணத்தின் சொருபமே. எப்பொருளை உடைத்தாலும் மிஞ்சுவது மண்ணே. எனவே காரணமாகிய மண்ணிற்கும் காரியமாகிய மண்பாண்டத்திற்கும் அடிப்படைப் பேதம் இல்லை. இப்படிக் காரண

காரியங்கள் விவரிக்கப்படும். இந்த முறையிலே உலகில் யாவும் காரியமே - இதனால் நான்மறைகளும் வேதம், வேதாந்தம் அனைத்தும் நீ அல்ல. நீ மட்டும் - உன் ஆன்மசொரூபம் மட்டுமே நிரந்தரம். எனவே அறியப்படக் கூடிய பொருளும் நீ இல்லை; அறியப்பட முடியாத பொருளும் நீ இல்லை. ஆன்ம சொரூபத்தை ஞானேந்திரியங்கள் அந்தக்கரணங்கள் வழியாக அறிய முடியாது. ஞானக்கண் ஒன்றால் மட்டுமே அதனை அறிய முடியும், உணர முடியும், ஞானவிசாரத்தால் மட்டுமே உணர முடியும்.

**65. வேதப் பொருள்தான் இதுவே றுசொனும்**
**வினையா வையும்அன்று ஒருவே றும்இலாப்**
**போதப் பொருள்அந் தமறைக்கு அணியாம்**
**புனிதப் பொருள்தத் வமசிப் பொருளே.**

வேதத்தின் அடிநாதம் பிரம்மத்தை அறிவதே. அதற்கு வேறான கருமங்கள், யாகங்கள், யோகங்கள், யாவும் ஞானத்தை அறியும் கருவிகள் அல்ல. குருமகானுடைய உபதேச வாக்கியங்களும் ஸ்ருதி, உபநிஷத், கீதை, பிரம்ம சூத்திரம், பிரஸ்தானத் திரயம் ஆகியவற்றைக் கற்றுத் தேர்ந்து அதன் வழியாக ஆன்ம விசாரம் செய்வதால் பேதங்கள் இல்லாத ஆதிஅந்தம் இல்லாத நிரந்தரமான ஞானவஸ்துவை, பரம்பொருளை உணர முடியும். தத்துவமஸி என்ற மகா வாக்கியத்தின் உயர்ந்த பொருளும் அதுவே.

**66. நிமலம் ஆரம்பரம் அது எனும்பொருள்**
**நீஎ னும்பொருள் சீவனே**
**அமலம் ஆனஇ ரண்டு ஐக்கியம்**
**அசிப தப்பொருள் ஆவதே.**

களங்கமில்லாத பூரணமான பரம்பொருள் அது எனும் பொருள்படும். (தத்) துவம் என்பது ஜீவர்கள் எனும் பொருள் படும் (ஜீவனாகிய நீ எனும் பொருள்) அஸி என்பது இருக்கின்றாய் என்பது பொருள்; களங்கமற்ற பரம்பொருளும் ஜீவனும் ஒன்றே என்பதே பொருள். (தத் - பரம்பொருள், துவம் - ஜீவனும் ஆகிய நீ, அஸி - இருக்கின்றாய்)

67. அருமை ஆகிய பிரமம் முன்னிலை
ஆகும் ஆருயிர் பின்னிலை
இருமை ஆனஇ ரண்டு ஐக்கியம்
எய்தும் ஆறுவன் என்னவே.

சசிவன்னனுக்குக் குருமகானுடைய உபதேசம் முழுமையாகப் புரியாமல் ஐயம் எழுகிறது. அறிதற்கு அரிய உயர்பொருள் பிரம்மம்; ஜீவர்களோ கடைப்பட்டவர்கள்; எங்ஙனம் இரண்டும் இணைய முடியும்; ஜீவபிரம்ம ஐக்கியம் நிகழும் வழி தான் என்ன என்று சசிவன்னன் கேட்க நந்திபராயணர் விளக்கம் கூறத் தொடங்கினார்.

68. உபாதி யால்வரு பேத மேஇவர்
பேதம் அன்றுஉரு உயிரினின்
கபஆதி யாம்உடல் போல்இ றைக்குள
காரண ஆதிகள் காயமே.

உபாதியால் வருகின்ற பேதங்களே ஜீவன், பிரம்மம் இருவரையும் தனித்தனியாய்க் காட்டுகிறது. ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் உள்ள வேறுபாடுகள் உபாதிகளால் ஆனவையே. ஜீவனுக்கு நோய் நொடிகள் - கபம், வாதம், பித்தம் - இவற்றால் ஏற்படும் நோய்கள், வளர்சிதை மாற்றங்களால் ஏற்படும். சிறுவன், இளைஞன், நடுத்தர வயது, நரை திரை மூப்பு, முதுமை, இறப்பு என்ற உபாதிகள் ஜீவனுக்கு உண்டு. இவை காரியமான ஜீவனுக்கு ஏற்படும் காரிய உபாதிகள் ஆகும். காரணமாகிய ஈசுவரனுக்கு இதே போன்று காரண உபாதிகள் ஏற்படும் அவற்றை அடுத்த பாடலில் விவரிக்கிறார்.

*சீ*ரிய ஈசனார்க்கும் *சீ*வர்க்கும் உபாதி ஒன்றேல்
ஆரிய குருவே பேதம் அறிவதுஎப் படிஎன்றக்கால்
காரிய உபாதி *சீ*வன் காரண உபாதி ஈசன்
வீரியம் மிகுச மட்டி வியட்டியால் பேதம் ஆமே.

(கைவல்யம் த. வி. ப. 43)

யுதிருட்சை = காரியம் முதலியவற்றால் உபேட்சை (விருப்பம்) உண்டாகாமை

நிர்+உபாதி = நிருபாதி; உபாதிகள் அற்ற காரியம் - அது - சம்ஹாரம் காலந்தான் எனவே நிருபாதி.

69. ஈசன் முற்றுஅறி வான்வி யாபி
எவைக்கும் ஏதுகி யம்பும்ஆ
காச கன்றிரு பாதி பாவனை
காரண ஆதிகள் ஆவதே.

எப்பொருளுக்கும் மேலானவன், எங்கும் நிறைந்தவன், முழுதும் அறிந்தவன், எல்லாவற்றிற்கும் காரணமானவன் ஆகிய ஈசுவரனுக்கும் உபாதிகள் உண்டு. எல்லாவற்றையும் படைப்பவன், அனைத்தையும் காப்பவன், அனைத்தையும் அழிப்பவன் ஆக ஏழு வகைக் காரண சப்த உபாதிகள் ஈசுவரனுக்கு உண்டு.

70. நீதி யால்இரு உபாதி நீக்கிட
நீஎ னச்சொல்ப தத்தினும்
ஆதி ஆகிய தற்ப தத்தும்
அசுத்த சுத்தம்உ ரைத்துமே.

ஜீவர்களுடைய உடலுக்குத் தவிர்க்க முடியாத காரிய சப்த உபாதிகள் சொன்னது போல் ஏழு வகை உண்டு; ஆத்மா என்பது சொல்லக் கூடிய த்வம்; சோகம் நீங்கிய உடல் உபாதிகள் இல்லாத சாட்சியாக உள்ளதே ஆத்மா ஆகும்.

71. ஆகம் முன்திகழ் ஏழும் நான்எனல்
தொம்ப தத்தில்அ சுத்தமே
சோகம் இன்றிய சான்று நான்எனல்
தொம்ப தப்பொருள் சுத்தமே.

அசுத்தம் களைந்த ஒன்றே த்வம் ஆகும்; நான் கர்த்தா, நான் போக்தா. நான் கருவி என்ற நினைவுகள் த்வம் பதத்தில் அசுத்தம் ஆகும். ஆத்மா என்பது தான் ஏழு உபாதிகளுக்கும்; சாட்சியாக மட்டுமே இருக்கிறேன், நான் கருமத்தில் ஈடுபடவில்லை என்ற பாவனையே சுத்தம் ஆகிய த்வம்.

72. அகில காரணம் ஆதி நான்எனல்
தற்ப தத்தில்அ சுத்தமே
சகல காரண சான்று நான்எனல்
தற்ப தப்பொருள் சுத்தமே.

மேலே சொல்லப்பட்ட காரண உபாதிகள் காரிய உபாதிகள் பற்றிய

உண்மைகளை விசாரித்து, அவற்றிலிருந்து விலகியிருந்து, நாசம் அடையச் செய்து மீதமுள்ள உபாதிகளற்ற கூடஸ்தனே பிரம்மத்தை உணரத் தகுதியுடைவன் ஆவான். அவ்வாறு கூடஸ்தன் தன்னை உணர்ந்த பின் வாசனா மலமும் நீங்கப் பிரமத்துடன் ஐக்கியம் ஆகிறது. இதுவே இருக்கின்றார் என்று சொன்ன அசிபதத்தின் பொருளாகும். (உபாதி = தனித்தன்மையை வேறோர் பொருளின்கண் உள்ளதாக மாறித் தோன்றுவது).

**73. செறிந்த காரண காரி யங்கள்**
**சிதைந்து மேல்உறு சித்தாய்**
**அறிந்த வாதனை தானும் அற்றதுஅவ்**
**அசிப தப்பொருள் ஆவதே.**

காரண காரியம் ஆகிய இரண்டிற்கும் இயல்பாக உபாதிகள் உண்டு. ஆதிகாரணமாகிய பிரம்மத்திற்கு உபாதிகள் இல்லை. உபாதன காரணமாகிய ஈசுவரனுக்கு உபாதிகள் உண்டு. அதே போல, காரியமாகிய ஜீவர்களுக்கும் உபாதிகள் உண்டு. ஈசுவரனுக்கான உபாதிகள் 1. ஈசன் - சர்வேஸ்வரன், யாவற்றிற்கும் மேலானவன் 2. சர்வஞ்ஞன் - முற்றும் அறிந்தவன், எல்லாவற்றையும் அறிந்தவன் 3. சர்வவியாபி - எங்கும் நிறைந்தவன், எவற்றிலும் நிறைந்திருப்பவன் 4. எவைக்கும்ஏது - எவற்றிற்கும் காரணமானவன் 5. ஆகாசன் - சர்வசிருஷ்டி, யாவற்றையும் சிருஷ்டிப்பவன் 6. சர்வ ஸ்திதிஞன் - பாவனை. யாவற்றையும் ரட்சிப்பவன், காப்பவன் 7. நிருபாதி - சம்ஹாரன் யாவற்றையும் அழிப்பவன். ஈசுவரன் ஒருவனே ஆனாலும் அந்த அந்தக் காரியங்கள் செய்கின்ற பொழுது அந்த அந்த உபாதிகள் ஏற்படுகின்றன. ஜீவர்களுக்கு ஏழு வகை உபாதிகள் உண்டு அவையாவன தூல சரீரம், இயந்திரம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், இப்படிப்பட்ட காரண சப்த உபாதிகளும் காரிய சப்த உபாதிகளும் தீர விசாரிப்பின் எல்லாம் மித்தை என்பது புரியும். இந்த உபாதிகள் ஒடுங்கின் மீதம் உள்ளது கூடஸ்தனும் பிரம்மமும் என்ற ஞானமே. இந்த உபாதிகள் யாவுக்கும் சர்வ சாட்சியாக, ஞான சொரூபம் மாத்திரமே பிரம்மம் என்பது புரியும்; அதுவே தத் என்பதன் பொருள்.

74. அசுத்தம் ஆகியது இருப தத்தினும்
முக்கி யப்பொருள் ஆகுமே
விசுத்தம் ஆனதுஇ லக்கி யப்பொருள்
என்று சொல்லுவர் விமலரே.

தத், த்வம் இரண்டு சொற்களிலும் சுத்தம், அசுத்தம் உண்டு. அசுத்தம் உடைய பொருளை முக்கியப் பொருளாகக் கருத மாட்டார்கள். சுத்தமான பொருளையே இலட்சியப் பொருள் என்று பெரியோர் கூறுவர்.

75. முரண்ட சீவப ரங்கள் தம்முடல்
முக்கி யப்பொருள் ஆவதே
இரண்டில் வேறுஅறு சிற்சொரூபம்
இலக்கி யப்பொருள் ஆவதே.

ஒன்றிற்கொன்று முரணான பிரம்மமும் ஜீவனும் ஐக்கியம் அடைய இயலாது. ஜீவன் தன் தேகமாகிய ஏழு உபாதிகளைக் கூடிய பொருள் நான் அல்ல என்னுடைய ஆன்மா அல்ல என்று தெளிவாக உணர்ந்த பின் காரியத்தின் அசுத்தம் நீங்குகிறது. சாட்சி சொரூபமாக உள்ள ஞானமே, கூடஸ்தனே நான் என்று கருதும் போது அசுத்தம் நீங்கி விடுகிறது. அந்தத் தருணத்தில் ஜீவபிரம்ம ஐக்கியம் கைகூடும் இது திண்ணம். சப்தத்திற்கு அர்த்தத்தோடு உள்ள சம்பந்தம் - (ஒரு வார்த்தைக்கு இயல்பாக அறியப்படும் பொருள்) அவை விருத்தி என்று அறியப்படும். அவை இருவகைப்படும். ஒன்று சத்தி விருத்தி, இரண்டு இலட்சணா விருத்தி. கடம் என்ற சொல்லைக் கேட்டவுடன் மண்பானை மனதில் தோன்றுவது சத்தி விருத்தி. அதையும் தாண்டி அந்தப் பானையோடு சம்பந்தப்பட்ட யாவையும் கண்முன்னே தோற்றுவிப்பது இலட்சணா விருத்தி (மண், குயவன், சக்கரம், மரப்பலகை அனைத்தும்) அக்கினியில் தன்னைச் சேர்ந்த வஸ்துகளே தகிக்கும்படியான சத்தி எப்படி உண்டோ அப்படி சத்தத்திற்கு சுரோத்திரத்தோடு சேர்ந்து பொருளின் தன்மையை உணரச் செய்யும் சாமர்த்தியம் உண்டு. அதுவே சத்தி விருத்தி அதையும் தாண்டி அப்பொருளோடு கூடிய அனைத்துப் பொருளையும் செயல்களையும் முழுமையாக உணர்த்துவது இலட்சணா விருத்தி ஆகும். (தொடரும்)

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)
## கோசலை, சுமித்திரை

(சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

கைகேயிக்கு, தான் உடனடியாகக் கானகம் செல்கிறேன் என்று பணிந்து கூறி வணங்கி விடைபெற்றுக் கொண்டு தன் தாய் கௌசல்யா தேவியிடம் செய்தியைக் கூறி விடை பெற இராமபிரான் சென்றார்.

பட்டாபிஷேகத்திற்குரிய பட்டுப் பீதாம்பரங்கள் ஏதும் இன்றி, தாதியர்களால் கவரி வீசப்படாமலும் சேவகர்கள் வெண்கொற்றக் குடை ஏந்தி வராமலும் இராமபிரான் எளியனாக, தனியனாக வரக் கண்டு கௌசல்யாதேவி துணுக்குற்றாள்.

**குழைக்கின்ற கவரி இன்றி, கொற்ற வெண்குடையும் இன்றி,**
**இழைக்கின்ற விதி முன் செல்ல, தருமம் பின் இரங்கி ஏக,**
**மழைக் குன்றம் அனையான் மௌலி கவித்தனன்வரும் என்று என்று**
**தழைக்கின்ற உள்ளத்து அன்னாள்முன், ஒரு தமியன் சென்றான்.**

இராமன் தாயை விழுந்து வணங்கி, தாயே உங்கள் அன்பிற்குரிய பரதன் முடிசூட்டிக் கொள்கிறான் என்று உரைத்தார். புதல்வர்கள் நால்வரையும் பேதம் இல்லாமல் ஒரே மாதிரியாக அன்பு செலுத்துகின்ற கௌசல்யாவும் பரதனுக்கு முடிசூட்டுதல் இராஜ நீதிக்குப் புறம்பானதாக இருந்தாலும், பரதன் உன்னிலும் நல்லான். நிறை குணத்தவன்; நின்னினும் நல்லனால்; பரதன் முடிசூட்டிக் கொள்ளுதல் நன்று என்று பூரண திருப்தியோடு உரைத்தாள். அடுத்து இராமன் தான் கானகம் சென்று 14 ஆண்டுகள் தவம் செய்து திரும்ப வேண்டும் என்று அரசர் கட்டளை, தாயே விடை தருக என்று பணிந்து வணங்கினான். இந்தச் செய்தியைக் கேட்ட கௌசல்யாதேவி துடிதுடித்துப் புலம்பினாள். இராமன் சமாதானம் செய்ய அதனை ஏற்றுக் கொண்டு நீ காட்டிற்குப் போவதனால் நானும் உன்னுடன் வருகிறேன் என்னையும் அழைத்துப் போ என்று மன்றாடினாள்.

என்னைப் பிரிந்து துயர்படப் போகும் சக்கரவர்த்திக்குத் தாங்கள் ஆறுதலாக அருகில் இருக்க வேண்டாமா, அவர் தாம் மேற்கொள்ள ஆரண்யம் செல்லும் போது வழி அனுப்ப வேண்டாமா! எனவே நீங்கள்

இங்கே இருப்பது தான் நியதி எனக்கு விடை கொடுங்கள் என்று விடைபெற்றுக் கொண்டான்.

இதற்கிடையில் பட்டாபிஷேக அரங்கத்திற்கு அருகில் இலக்குவனுடைய சினம் நிறைந்த வீரவார்த்தைகள் கேட்டு அவ்விடத்தை அடைந்தான்.

**கண்ணின் கடைத் தீ உக, நெற்றியில் கற்றை நாற,**
**விண்ணில் சுடரும் சுடர் தோன்ற, மெய்ந்நீர் விரிப்ப**
**உள் நிற்கும் உயிர்ப்பு எனும் ஊதை பிறக்க, நின்ற**
**அண்ணல் பெரியோன் தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்.**

அண்ணல் இராமனுக்குப் பட்டம் இன்றிப் பறித்து அவனைக் காட்டிற்குச் செல்லக் கட்டளையிட்ட கைகேயித் தாயை அழிப்பதற்குப் போர்க் கோலம் பூண்டு இலக்குவன், "அண்ணல் இராமனுக்கு நான் முடிசூட்டுவேன். யார் தடுத்தாலும் அஞ்சேன், எதிர் வருகின்றவர்கள் வரலாம்" என்று வஞ்சினம் கூறி வில்லை எடுத்து நாண் பூட்டி அண்டசராசரமும் நடுங்க ஒலி எழுப்பினான். அவ்வொலியைக் கேட்டு இராமன் இலக்குவனிடம் வந்து அவனைச் சமாதானம் செய்யத் தொடங்கினான்.

அன்னை கைகேயி வரம் கேட்டதும் மன்னர் இணங்கியதும் அவர்களுடைய செயல்கள் அல்ல, பிழைகள் அல்ல, அது விதியின் பிழை. எனவே அமைதி கொள்வாயாக என்று இலக்குவனுக்குச் சமாதானம் உரைத்தான்.

**நதியின் பிழை அன்று நறும் புனல் இன்மை; அற்றே**
**பதியின் பிழை அன்று; பயந்து நமைப் புரந்தாள்**
**மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று; மைந்த!**
**விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது** என்றான்.

ஆனால் இலக்குவன் சமாதானம் அடையாமல் விதிக்கும் விதி ஆகும், என் வில் தொழில் காண்டி என்று சினந்து புறப்பட இராமன் உடனே தாய் தந்தை கட்டளைக்கு அவர் மேல் கோபம் கொள்வது நன்றன்று; நான் இந்த இராஜியத்தைத் தந்தை வார்த்தைக்கு எதிராகவும், தாயின் கட்டளைக்கு எதிராகவும் நடந்து பெறுவது தருமம் ஆகுமா? அதனால் நான் வனம் செல்கிறேன், நீ சினத்தைத் தவிர்த்து நலமாக இருப்பாய்,

நன் சொற்கள் தந்து ஆண்டு, எனை நாளும் வளர்த்த தாதை
தன் சொல் கடந்து, எற்கு அரசு ஆள்வது தக்கது அன்றால்
என் சொல் கடந்தால், உனக்கு யாது உளது ஈனம்? என்று இராமன் கேட்க இலக்குவன் அதனை ஏற்றுக் கொண்டு சமாதானம் ஆனான். இலக்குவன் சீற்றம் தணிந்து மாற்றத்தை ஒப்புக் கொண்டான். இருவரும் மாண்புடைய அன்னை சுமித்திரையின் அரண்மனைக்குச் சென்றனர்.

சுமித்திரை நடந்தவற்றை அறிந்து துயருற்ற போதும் இராமனுக்கு ஆசி கூறி வாழ்த்தினார். அந்த நேரத்தில் கைகேயி அன்னையின் தாதிப் பெண்கள் இராமன் அணிய வேண்டிய மரவுரிகளைக் கொண்டுவந்து அளித்தார்கள். அப்பொழுது இளவல் இலக்குவன் தானும் அண்ணனோடு கானகம் செல்வேன் என்று தாயிடம் வேண்டி அவனும் மரவுரிகளை வாங்கிக் கொண்டான்.

உடனே சுமித்திரை "நன்று, நீயும் கானகம் சென்று அண்ணனுக்கு தொண்டு செய்வாயாக. இவன் தம்பி என்ற முறையில் செல்லாமல், இராமனின் அடியவன், தொண்டன் என்பதைக் கருத்தில் கொண்டு செல்வாயாக!" என்றாள்.

ஆகாதது அன்றால் உனக்கு; அவ் வனம் இவ் அயோத்தி;
மாகாதல் இராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும்
போகா உயிர்த் தாயர் நம் பூங்குழல் *சீதை* - என்றே
ஏகாய்; இனி, இவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள்

(ஏதம் - குற்றம்)

பின்னும் பகர்வாள், மகனே! இவன்பின் செல்; தம்பி
என்னும்படி அன்று, அடியாரின் ஏவல் செய்தி;
மன்னும் நகர்க்கே இவன் வந்திடின், வா; அது அன்றேல்
முன்னம்முடி என்றனள், வாள்விழி சோர நின்றாள்.

மேலே சொன்ன இரு பாடல்களும் சுமித்திரையினுடைய தாய் உள்ளத்தையும், பெருந்தன்மையையும் தன் மகன் இலக்குவன் என்றென்றும் இராமனுக்கு ஏவலனாக உடன் இருக்க வேண்டும் என்ற அவள் விருப்பத்தையும் காட்டுகின்றன.

இருவரும் சுமித்திரையிடம் விடைபெற்றுச் சீதையிடம் விடைபெறச் சென்றார்கள். (தொடரும்)

## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 5

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

இதுவரை காப்பியக் கவிஞர் மீனவர் நம்மைக் கும்பகோணத்தை ஒட்டிய திவ்ய தேசங்களைத் தரிசிக்க வைத்த நிலையில் திருவாரூர் ஒட்டிய தலங்களைத் தரிசிக்க அழைக்கையில் திருக்கண் என்ற அடைமொழியுடைய மூன்று திவ்ய தேசங்களுக்குச் செல்கின்றோம்.

திருக்கண் என்றால் அருட்பார்வை என்று பொருள். ஆண்டவன் - ஆன்மா மீது திருக்கடைக்கண் சாத்தும் போது ஆன்மா ஈடேறும் என்பது ஆன்மீக விளக்கமாகும். அந்த வகையில் திருக்கண்ண மங்கை திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி எனும் மூன்று திவ்ய தேசங்களிலும் பரந்தாமன் வெவ்வேறு மூலத்தானத் திருநாமங்களுடன் ஆன்மாக்களுக்குச் சேவை சாதிக்கின்றதை வரிசையாகக் காண்போமாக!

அருட் பார்வையைப் பரந்தாமன் ஆன்மாக்களுக்கு வழங்குவது பொதுவானாலும் அவனே ஆன்மாவுக்கான திருக்கண்ணமுதுப் பிரசாதமாக உள்ளான் என்ற சிறப்பு நிலையில் இம்மூன்று தலமும் திருக்கண் எனும் தித்திப்பு அடைமொழியைப் பெற்றுள்ளது, கண்ணமுது என்றால் பாயாசம் என்று பொருள், அது ஓர் இனிப்பு உணவாகும், மணிவாசகர் - தேனாய், இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான் எனக் கூறியது போலப் பரந்தாமன் ஆன்மாக்களுக்கான தித்திப்புப் பாயாசப் பிரசாதமாக உள்ளான் என்பதைக் குறிப்பாக உணர்த்தவே திருக்கண் என்ற பொது அடைமொழி - மூன்று திவ்ய தேசத்திற்கும் ஒருசேரக் கூறப்பட்டதாம் என்க!

திருச்சேறைக்கு அருகில் உள்ளது திருக்கண்ண மங்கை. பக்தவச்சலப் பெருமாளாகப் பரந்தாமன் கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார். ஆன்மாக்கள் உய்ய வேண்டும் என்ற வாத்சல்யத்துடன் (அன்புப் பெருக்கமுடன்) இத்தலத்தில் காலடிக்குள் பரமதம் காட்டும் மாலவனாக உள்ளதால் கவிஞர்

திருக்கண்ண மங்கை பணிந்தேத்த வாருமினே என்கிறார். தலையாரப் போற்றுமினே! என்றும் கூறுகிறார். திருமங்கை மன்னன்மங்களா சாசன மாலை சூடியதால் இயல்பாக மணக்கும் துளசி இரட்டிப்பாக மணக்கின்றதாம் என்கிறார் கவிஞர். திருமங்கை மன்னன் சொல் திருமாலை சூடியவன் மருமணக்கும் துளவத்தான் என்பது கவிஞர் வாக்கு.

இப்படிக் கண்ண மங்கையைச் சேவித்த நாம் திருக்கண்ணபுரம் செல்கின்றோம், நீலமேகப் பெருமாளாகப் பரந்தாமன் – பெரியாழ்வார் ஆண்டாள் குலசேகர ஆழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார்களின் மங்களா சாசனம் கேட்ட வண்ணம் கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார்.

இத்திருத்தலத்தில் பரந்தாமன் தான் மானுடனாக அவதரித்ததை நம்பவைப்பதன் பொருட்டு விரித்த தலைமுடியுடன் சௌரிராசன் என்ற உற்சவ மூர்த்தமாகக் காட்சி தருகிறார். சௌரி என்றால் திருமாலுக்கு ஒரு பெயராயினும் கவரிமான் மயிரால் அமைத்த அலங்காரன் என்பதும் சிறப்புப் பொருள் உண்டு. எனவே சௌரிராசன் என்றால் தன்னிலையில் தாழாமையாகிய மானஉணர்ச்சிக்கான மானுடத்தைத் தன் திருக் கோலத்தால் காட்டி ஆன்மாக்களுக்கு அருள்பாலிப்பதால் கண்ணால் காணத்தகும் புரம் என்ற கருத்தில் திருக்கண்ணபுரத்தைப் பக்தர்களே வந்து பணிந்துய்ம்மின் என்கிறார் மீனவர்.

மூன்றாவதான திருக்கண்ணங்குடியில் லோகநாதன் திருநாமத்துடன் பரந்தாமன் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் கேட்ட வண்ணம் கிழக்கு நோக்கிய நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார், தாமோதர நாராயணன் என்ற உற்சவ மூர்த்தமாக எழுந்தருளியுள்ள பரந்தாமன் இருப்பது இத்தலத்தின் தனிச்சிறப்பாகும்.

ஏனெனில் மூலவர் சியாமளவண்ணமேனியராக இருந்தாலும் வீதி உலாவரும் உற்சவர் தாமோதரனாகத் திருநாமம் கொண்டு வருவது பெரு விசேடமாகும்.

கண்ணன் வெண்ணெய் எடுத்து உண்டபோது தாய் யசோதையால் உரலில் கட்டிப் போட்ட போது கட்டுண்டு கிடந்த எளிமைக்காய்

(சௌலப்பியம்) தாமோதரன் எனப்பட்டான் என்பது கண்ணன் கதையாகும். உதரன் - வயிறன். தாம்புக்கயிற்றால் கட்டப்பட்டதால் தாம்பு உதிரன் என்ற சொற்களின் நீட்சி தாமோதரன் என வடமொழி இலக்கணப்படி அமைந்தது. தாம்பு என்றால் கயிறு.

திருமாலுக்குள்ள திருநாமங்களைச் சொல்லிய வாறே பீஷ்மர் முள்ளுப் படுக்கையின் வலி தெரியாமல் கிடக்கும்போது தாமோதரன் என்ற பெயர் சொன்னதும் அடுத்த பெயரைச் சொல்லாமல் அதே திருநாமத்தையே திரும்பத் திரும்பச் சொல்லிச் சொல்லிக் கண்ணீர் விட்டு அழுதாராம் என்பது மகாபாரதத்தின் ஒரு கதையாகும்.

பார்த்தவர்களுக்கும் மிகவும் மனம் இரக்கமாய் இருந்ததால் பீஷ்மரிடம் விபரம் கேட்ட போது ஓங்கி உலகளந்த பெருமான், கூனிக்குறுகி தாம்புக் கயிற்றால் கட்டி உரலுடன் பிணித்த யசோதையின் செயலுக்கு அடங்கி ஒடுங்கிக் கிடந்த சௌலப்பியமே தம்மை மனம் கரையச் செய்ததால் அத்தாமோதரன் எனும் பெயரைத் தாண்டி அடுத்த பெயரைச் சொல்ல மறந்து விட்டது - என்றாராம், வெண்ணெய்யின் உருக்கம்போல் இந்த வைபவம் உள்ளதால் கண்ணாரப் பார்த்தாலே அகத்தில் குடிகொள்ளும் பரந்தாமனாக உள்ளதைத் திருக்கண்ணங்குடியின் சேவை சாதித்தல் அதி அற்புதமாகும்.

ஈண்டு அற்புதம் எனக்கூறப்பட்டதாவது திருக்கண்ண மங்கைக்கோ திருக்கண்ண புரத்திற்கோ இல்லாத கூடுதல் சிறப்பு இத்திருக்கண்ணங்குடியின் தாமோதரத் திருநாமத்தால் வந்தது என்பது கருத்து, அதனால் தான் கவிஞர் கண்ணங்குடிதனில் கட்டுண்டான் என்ற முதற்பாடலின் தொடக்கத்தில் பரந்தாமனைச் சிலாகித்தார். உறங்காப் புளிமரமும் மகிழ மரமும் இத்திருத்தலத்தின் புற அழகைத் தந்தாலும் வெண்ணெய்யாய் உருக்கும் தாமோதரத் திருநாம அக அழகே அழகு எனலாம் என்க!

இங்ஙனமாக, திருக்கண் சார்த்தப் பெற்ற பரந்தாமனின் அருள்முத்திரையைப் பெற்ற நாம், மீனவரின் அன்பு அழைப்புடன் திருநாகை என்னும் நாகப்பட்டின திவ்ய தேசத்திற்குச் சென்று நீலமேகப் பெருமானைச் சேவிக்கின்றோம், கிழக்கு நோக்கிய திருமுகத்துடன்

திருக்கரத்தில் கதாயுதம் தாங்கிய நின்ற கோலமாய்ப் பரந்தாமன் சாதிப்பது கண்கொள்ளாக் காட்சி என்பதால்தான் உற்சவர் சௌந்தரிய ராசனாய்த் திருநாமம் பெற்றுத் திகழ்கிறார், சௌந்தரியம் என்றது சுந்தரம், அழகு என்றெல்லாம் பொருள்.

இந்நாகைப் பரந்தாமன் - திருமங்கை ஆழ்வாரின் மங்களா சாசனம் கேட்டு மகிழ்ந்தாலும் வேதங்களின் உபநிடதக் கிளைகளான முப்பது அங்கங்களும் ஓதக் கேட்கும் உத்தமனாக உள்ளான் எனக் கவிஞர் பாடுகிறார். அங்கங்கள் ஆறைந்தாய் அமைந்துள்ள வேதங்கள் எங்கெங்கும் தான் எழும் நாகை - என்பது கவிஞர் வாக்கு!

காவிரிப் பூம்பட்டினம் கடல் சீற்றத்தால் அழிந்ததும் இந்நாகப்பட்டினம் உருவானதாக வரலாறு கூறுகிறது. இது சோழர் தலை நகரமான உறையூரைப் போலக் கடற்கரைப் பட்டினமாய், கடல் வாணிபச்சிறப்புடன் இருந்தது என்ற குறிப்பைக் கவிஞர் முதல் பாடலில் பதிவு செய்துள்ளார்.

எழுநிலை மாடத்தில் எண்ணெய் விளக்கேற்றி வைத்து வழிகாட்டும் விளக்கமென வங்கங்கள் பயன் பெறவே ஆழ்கடலில் ஒளிகாட்டும் அற்புதம் சேர் திருநாகை என்பது கவிஞர் வாக்கு. கலங்கரை விளக்காக இந்நகர் இருந்ததற்கேற்ப ஆன்மாக்கள் ஈடேறக் கலங்கரை விளக்காக இருப்பவன் இந்த நாகை முகுந்தன் என்பது கருத்து. இந்தக் கருத்துக்கேற்பவே மீனவர் துருவன் எனும் தவமுடைய தோன்றலுக்கும் திகழ் ஆதி சேடனுக்கும் உருக்காட்டி மகிழ்வித்த நாகை (5) எனச் சான்று கூறிப் பாடியுள்ளார்.

பலராமனின் தம்பி துருவன், இவனுக்குத் தந்தையால் சாபம் ஏற்பட, அதனைப் போக்கிக் கொள்ள நாகைப் பரந்தாமன் அருளால் உத்தமன் என்னும் யட்சகனைக் கொன்று பாவ விமோசனம் பெற்றதாகப் பாகவத காசி காண்டம் கூறுகிறது.

ஆக ஆன்மாவின் கலங்கரை விளக்கான நாகை வைகுந்தனைச் சேவித்தவாறு தஞ்சைத் தரணியில் உள்ள மாமணிக் கோவில் என்னும் தஞ்சை வெண்ணாற்றங்கரை திவ்ய தேசத்து நரசிங்கப் பெருமானைச் சேவிக்க மீனவருடன் செல்லும் நாம், கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் நின்ற திருமேனியனாம் மணிக்குன்றப் பெருமாளைச்

சேவிக்கின்றோம். திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், பூதத்தாழ்வார்களின் மங்களாசாசன சானித்தம் மிக்கது இந்த வெண்ணாற்றங்கரை திவ்ய தேசமாகும்.

இந்தத் திவ்யதேசம் ஓர் அதிசயம் அளிப்பதாகும்; அதாவது தஞ்சை மாமணிக் கோயில் என்ற பெயரிலே மூன்று சந்நிதிகள் தனித்தனி கொண்ட தாய்த் தனித்தனித் தலங்களாக வெண்ணாற்றங் கரையில் ஒருசேர அடுத்தடுத்துக் காணுமாறுள்ளதால் இத்திவ்யதேசம் ஓர் அதிசயமானதாகும் எனப்பட்டது, இந்தப் பேருண்மையை இத்திவ்ய தேசத்தில் மங்களா சாசனம் செய்த திருமங்கையாழ்வார் உடம்புருவில் மூன்று ஒன்றாய் மூர்த்தி வேறாய் நின்றானை என்று பாடியதால் உணரலாம், மூன்று மூலவரும் கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் வீற்றிருந்த கோலமாய் சேவை சாதிக்கின்றனர். ஒருவர் - நீலமேகப் பெருமான், இரண்டாமவர் - மணிக்குன்றப் பெருமான். மூன்றாமவர் - நரசிம்மர் ஆவார், இந்த நரசிம்ம விண்ணகரம் தஞ்சையாளிநகர் என்ற சிறப்புப் பெயருடன் அழைக்கப்படுகின்றது.

யாளி என்பது சிங்கமான விலங்கு, ஒரு காலத்தில் இரணியனுக்காக நரசிம்மராக அவதரிக்க வேண்டிய தேவை இருந்தது, ஆனால் மீண்டும் அதர்மம் எழநேர்ந்தால் அவதாரம் எடுப்பதற்குத்தயாராக இருக்கும் நினைப்பை ஊட்டும் வகையில் தஞ்சை யாளி நகர் என்ற தலப் பெயருடன் நரசிம்மராய்ச் சேவை சாதிக்கின்றார் என்பதை ஓர் தத்துவமாகக் கூறுகின்றனர், இந்நிலையில் காப்பியக் கவிஞரும் மாமணிக்குன்றம் என்னும் வெண்ணாற்றங்கரையில் அடுத்தடுத்த திவ்ய தேசத் தலங்கட்குத் தனித்தனிப் பேரிட்டுக் கூறிப் பக்தர்களை வணங்கச் செய்தார்.

இங்ஙனம் வெண்ணாற்றங்கரைப் பரந்தாமனை வணங்க வைத்த மீனவர் நம்மைக் கும்பகோணத்திலிருந்து கொர்க்கை செல்லும் பேருந்தின் உதவியால் நாதன் கோவில் என்னும் திருநந்திபுர விண்ணகரத்திற்கு வரவேற்கின்றதை இனிக் காண்போமாக!

திருமங்கை மன்னரின் மங்களா சாசனம் கொண்ட நந்திபுர விண்ணகரத்தில் பரந்தாமன் மேற்கு நோக்கிய சன்னிதியாய்ச் சேவை சாதிக்கின்றார். திருமங்கையாழ்வார் நந்தி பணி செய்த நகர் நந்திபுர

விண்ணகரம் என மங்களா சாசனம் செய்ததற் கேற்பப் பக்தி உணர்வுடைய நந்திக்கு அருள் செய்த தலமாகச் சேவிக்கின்றோம். மேலும் புறா ஒன்றுக்காக உயிரையும் உடலையும் அர்ப்பணித்த சிபிச் சக்கரவர்த்தியின் பரோபகாரத்தை அங்கீகரித்த பரந்தாமனாக இந்த நந்திபுரப் பரந்தாமன் உள்ளதாய் இத்திவ்ய தேசம் பற்றிய வைபவத்தைச் சிறப்பிக்கின்றனர் அத்திருத்தல மக்கள்.

மீனவரோ கவிகாளமேகம் பிறந்த ஊர் என்கிறார். கவிகாள மேகமெனும் கார்முகிலான் பிறந்தபதி செவியாட்டும் நந்தி பிணி சீராக்கிக் காத்த தலம் என்பது மீனவரின் மேதா விலாச வாக்காகும்.

நந்திபுர நாயகரைச் சேவித்ததும் கும்பகோணத்திலிருந்து அணைக்கரை செல்லும் வழியில் உள்ள திருவெள்ளியங்குடித் திவ்ய தேசத்திற்கு மீனவருடன் செல்லும் நாம் அங்குள்ள கோலவில்லியனான இராமனை ஆராதனை செய்கின்றோம். பெருமான் கிழக்கு நோக்கிய திருமுகத்துடன் புஜங்க சயனத்தில் சேவை சாதிக்கின்றார். திருமங்கையாழ்வாரின் மங்களா சாசனம் நிரம்பிய இத்தலத்தை மீனவர் கரம் நான்கு தானுடைய கருடன் தான் உவந்த பதி, தரமான தீர்த்தங்கள் நான்குடைய தனித்தபதி (4) எனப் பாராட்டுகிறார்.

ஈண்டுள்ள பரந்தாமன் அதர்ம அசுர சக்திகள் தலையெடுக்கா வண்ணம் உயிரைக் காக்கும் நாயகமாக இருப்பதோடு உலகிற்கே ஒளி தரும் சுக்கிரனாகிய வெள்ளிக் கோளானவன் தவமிருந்து கண்பெற வேண்டியவாறு கண் பெற்ற புண்ணிய தலம் என்கிறார் கவிஞர்.

உயர்வெள்ளி தவமிருந்தே ஒரு கண்ணைப் பெற்றதலம் உயிரனைத்தும் காக்கின்ற திருநெடுமால் வெள்ளிகுடி என்பது கவிஞர் (1) வாக்கு.

பரந்தாமன் மனித குல இராம அவதாரத்தை நினைப்பிக்கும் கோலவில்லி ராமனாக இவ்வெள்ளியங்குடியில் சேவை சாதித்தாலும் மேலும் இதே இராமன் என்னும் திருநாமத்துடன் திருப்புள்ளம் பூதங்குடியிலும் திருப்புல்லாணியிலும் சேவை தந்த வண்ணமாயுள்ளான். இம்மூன்று திவ்ய இராமனும் சீதையைப்

பிரிந்தவனாகவே சேவை சாதிப்பது உலகிற்கு மக்களின் கிரகஸ்தத்தை(மனையறத்தை) நினைப்பூட்டுவதாக உள்ள தாய் அவ்வத்திவ்ய தேசத்திலும் வாழ்க்கைத் தத்துவத்தைக் கூறி மக்களை நன்னெறிப் படுத்துகின்றனர்.

இம்மூன்று திவ்யத்திலும் சீதா பிராட்டியில்லை யாயினும் அவளின் அம்சமாக வெள்ளியங்குடியில் ஆதிபராசக்தி அம்ச மரகத வல்லியாயும் புள்ளம்பூதங்குடியில் பூமி பிராட்டியாயும் புல்லாணியில் பெரிய பிராட்டியாயும் ஒன்றாய் உடனாய் ஐக்கியமாய்ச் சேவை சாதிப்பதான கருத்தை வைணவ சிரேட்டர்கள் தத்துவமாகப் பகர்கின்றனர்.

இத்தரு வெள்ளியங்குடியைச் சேவித்த நாம் மீனவருடன் திருவழுந்தூர் என்னும் தேரழுந்தூர் திவ்ய தேசத்தின் தேவாதிராசனைச் சேவிக்கச் செல்வோமாக!

## பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்
## TALES AND PARABLES என்ற ஆங்கில நூலிலிருந்து தமிழில்

தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்

14

ஒரு தந்தைக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். அவர்கள் இருவரையும் குரு ஒருவரிடம் தந்தை அனுப்பி, பிரம்மம் என்றால் என்ன என்று கற்றறிந்து வாருங்கள் என்றார். தந்தையின் விருப்பப்படியே புதல்வர்கள் இருவரும் புறப்பட்டுப் போனார்கள். தந்தை வழிகாட்டியவாறே குருவைச் சந்தித்தார்கள்; உரிய காலம் வரை குருவிடம் பயின்று திரும்பினார்கள். அவர்கள் கற்றுக் கொண்டவிதம் எத்தகையது என்று அறிந்து கொள்ள விரும்பிய தந்தை புதல்வர்களிடம் பேசினார்; எல்லாம் கற்றுக் கொண்டு வந்துள்ளீர்கள். ரொம்பவும் மகிழ்ச்சி; பிரம்மம் என்றால் என்ன, கொஞ்சம் விளக்கிச் சொல், பார்க்கலாம்!

முதலாம் மகன் நீண்ட உரை ஆற்றும் பாணியில் வேதங்கள், புராணங்கள் ஆகியவற்றிலிருந்து மேற்கோள்கள் என்று ஆரம்பித்துப்

பேசத் தொடங்கினான்; அனைத்தையும் கேட்டுக்கொண்டிருந்த தந்தை அடுத்து இரண்டாம் மகனிடம் கேட்டார். அவன் வாய்திறந்து எதுவும் பேசவில்லை; கண்மூடி மௌனமாக இருந்தான். பேசா நிலையே பெரியநிலை என்பது போல அவன் நின்றான்; பிரம்மம் என்பது பேச்சுக்கு அப்பாற்பட்டது என்பதை இரண்டாம் மகன் உணர்ந்து கொண்டான் என்று தந்தை மகிழ்ந்தார்.

15

கடவுள் இருமுறை சிரித்துக் கொள்கிறார். மருத்துவர் ஒருவர் குழந்தையின் தாயைப் பார்த்துக் கவலைப் படாதீர்கள், நான் காப்பாற்றுவேன் என்று சொல்லும் போது சிரிக்கிறார். இரண்டு சகோதரர்கள் இந்த நிலம் உனக்கு இந்த நிலம் எனக்கு, என்று பேதம் பார்த்துப் பிரித்துச் சண்டை போட்டுக் கொள்ளும் போது சிரிக்கிறார். குழந்தையை நான் காப்பாற்றுகிறேன், ஆனால் தான் காப்பாற்றுவதாக டாக்டர் சொல்கிறாரே என்று ஒருமுறையும், நானே படைத்தேன்; இது எனக்கு, இது உனக்கு என்று மனிதர்கள் பிரித்துப் பிரித்துப் பேசுகிறார்களே என்று ஒரு முறையும் ஆக, கடவுள் இரண்டு முறை சிரித்துக் கொள்கிறார்.

16

ஒரு கப்பலின் பாய்மர உச்சியில் அமர்ந்திருந்த ஒரு பறவை, கங்கை நதியின் அந்தப் பக்கத்தில் சமுத்திரம் இருக்கும் எனப் பறந்து பறந்து சென்றது; வெறும் தண்ணீர்தான் தெரிந்தது; வேறு ஒன்றும் தெரியவில்லை; திரும்பி வந்து பாய்மர உச்சியில் அமர்ந்து கொண்டது; சிறிது பொழுது கழித்து வடதிசை நோக்கிப் பறந்தது; அங்கிருந்து பார்த்த வேளையிலும் தண்ணீர்தான் தெரிந்தது; வேறு ஒன்றும் தெரியவில்லை; மறுபடியும் திரும்பி வந்து பாய்மர உச்சியில் உட்கார்ந்துவிட்டு தெற்கு நோக்கிப் பறந்தது; அங்கேயும் தண்ணீர்தான் தெரிந்தது. இப்படி திசைதோறும் பறந்து, சென்று சென்று பார்க்கும் போது எங்கே பார்த்தாலும் தண்ணீராகவே தெரிந்தது; கடைசியாகக் கப்பலின் பாய்மரக் கப்பலின் உச்சிக்கே வந்து உட்கார்ந்து விட்டது.

மனிதர்களும் அப்படித்தான்; கடவுள் அங்கே இருக்கிறார், இங்கே இருக்கிறார் என்று திசைதோறும் அலைந்து திரிகிறார்கள்; "இங்கேதான் இவ்விடத்தில் தான் இருக்கிறான்" என்று தீர்க்கமாக நம்பும் வரை பறவை போன்ற அலைச்சல் தான் மிஞ்சும்.

17

நண்பர்கள் நால்வர் நடந்துபோய்க் கொண்டிருந்தார்கள்; எதிரே ஒரு சுவர் குறுக்கிட்டது. சுவருக்கு அப்பால் என்ன இருக்கிறது? என்ன தெரிகிறது? என்று அறிந்து கொள்ள ஆசைப்பட்டார்கள். ஒவ்வொருவராய் ஏறி, எட்டிப்பார்த்துவிட முயன்றார்கள்; முதலில் ஒருவர் ஏறிஎட்டிப் பார்த்தார்; ஏதோ ஓர் அபூர்வப்பொருளைப் பார்த்துவிட்டார்; திரும்பி, தன்னுடன் வந்தவர்களிடம் சொல்ல அவரால் முடியவில்லை; ஆ! ஆ! ஆ! என்று வியந்து வியந்து சொல்லிவிட்டு உள்ளே குதித்து விட்டார்; இரண்டாமவரும் அப்படியே பார்த்து, ஆ! ஆ! ஆ! என்று வியந்து உள்ளே குதித்துவிட்டார்; மூன்றாமவரும் அப்படியே; நான்காமவரும் அப்படியே! இறைவனைப் பார்த்தவர்கள், அறிந்தவர்கள் பாடெல்லாம் இப்படித்தான்... கண்டவர் விண்டிலர்.

## ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 4. திருக்கரம்பனூர் என்ற உத்தமர் கோவில்

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் நான்காவது திவ்ய தேசம், திருவெள்ளறை என்ற ஸ்வேதபுரி. சோழநாட்டுத் திருப்பதிகளுள், இது நான்காவது திருத்தலமாகும்.

இக்கோயில் வெண்பாறைகளால் ஆன குன்றின் மேல் அமைந்துள்ளதால், இத்தலம் வெள்ளறை என அழைக்கப்படுகிறது. இக்கோயில், ஸ்ரீரங்கம் கோயிலை விடப் பழமை வாய்ந்ததாகக் கருதப்படுவதால், ஆதிவெள்ளறை என்றும் அழைக்கப்படுகிறது.

ஒருமுறை திருப்பாற்கடலில் மகாவிஷ்ணுவும் மஹாலஷ்மியும் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது பெருமாள், லெஷ்மி உனது கருணையால் ஜீவராசிகள் அனைத்தும் சந்தோஷமாக இருக்கின்றன. இதனால் உனக்கு வேண்டிய வரத்தை என்னிடமிருந்து கேட்டுப் பெறலாம் என்றார். அதற்கு லெஷ்மி, தங்களது திருமார்பில் நித்யவாசம் செய்யும் எனக்கு எதுவும் தேவையில்லை. எனினும், எனது பிறந்த இடமான இந்தப் பாற் கடலில் தேவர்களைக் காட்டிலும் எனக்குத் தான் அதிக உரிமை வேண்டும் என்றாள். அதற்குப் பெருமாள் இது

இயலாது. இங்கு நான் தான் அனைத்துமாக இருக்கிறேன். இருந்தாலும் பூமியில் சிபிச் சக்கரவர்த்திக்கு நான் தரிசனம் தரும்போது உனது விருப்பத்தை நிறைவேற்றுகிறேன் என்றார்.

இதன்படி, ஒருமுறை சிபிச் சக்கரவர்த்தி, தொல்லை கொடுத்த ராட்சசர்களை அடக்குவதற்காகத் தன் படைகளுடன் சென்றான். அவ்வாறு செல்லும் போது, ஒரு வெள்ளைப் பன்றி அவர்கள் முன் தோன்றி பெருந்தொந்தரவு கொடுத்தது. படைவீரர்களால் அப்பன்றியைப் பிடிக்க இயலவில்லை. அதனால் சிபிச் சக்கரவர்த்தியே அப்பன்றியைப் பிடிக்கச் சென்றார். அப்பன்றி அங்குள்ள மலை மீதுள்ள புற்றில் மறைந்து கொண்டது. அரசன் அதைப் பிடிப்பதற்காக மலையைச் சுற்றி வந்த பொழுது, அங்கு ஒரு குகையில் கடுமையாகத் தவம் செய்து கொண்டிருந்த மார்க்கண்டேயரைக் கண்டு அவரிடம் விஷயத்தைக் கூறினான். அதற்கு அம்முனிவர், நாராயணனின் தரிசனத்திற்காகத் தவம் செய்து கொண்டிருக்கின்றேன். ஆனால் அவர் உனக்கு வராக உருவத்தில் காட்சி கொடுத்திருக்கிறார். நீ அந்தப் புற்றுக்குப் பாலால் அபிஷேகம் செய் எனக் கூறினார். அரசனும் அவ்வாறு செய்யவே, நாராயணன் தோன்றி அனைவருக்கும் காட்சி கொடுக்கின்றார்.

இத்தரிசனத்திற்கு வந்த மஹாலெஷ்மியிடம், நீ விரும்பியபடி இத்தலத்தில் சகல அதிகாரங்களோடும் இருப்பாயாக, என்று கூறிமறைகிறார். பெருமாள் அளித்த வரத்தின் படி செங்கமலவல்லித் தாயார் மூலஸ்தானத்திலேயே இருந்து அருள் பாலிக்கின்றார். இதனால் தான் இத்தலம் தாயாருக்குச் சிறப்புடைய தலமாக இருக்கின்றது.

மார்க்கண்டேயரின் சொற்படி தரிசனம் தந்த பெருமாளுக்குக் கோயில் கட்ட சிபிச் சக்கரவர்த்தி முடிவு செய்து, சேவை செய்வதற்காக 3700 ஸ்ரீவைஷ்ணவர்களை அழைத்து வந்தார். வரும் வழியில் ஒருவர் இறந்துவிட்டார். அதனால் கவலையுற்ற மன்னரிடம் பெருமாள் நானே இறந்தவரில் ஒருவருக்குப் பதிலாக 3700 பேரில் ஒருவராக இருந்து, நீ நினைத்த 3700 கணக்குக் குறைவுபடாமல் பார்த்துக் கொள்கிறேன் என்றார்.

சிபிச் சக்கரவர்த்திக்கு, வெள்ளைப் பன்றியாக, ஸ்வேதவராகனாகப் பெருமாள் காட்சி தந்ததால், இத்தலம் ஸ்வேதபுரி என்று அழைக்கப்பட்டது.

இங்குள்ள மூலவர் : புண்டரீ காட்சப் பெருமாள் (செந்தாமரைக் கண்ணன்)

புண்டரீகன் என்ற யோகி திருவெள்ளறையில் ஒரு நந்தவனம் அமைத்து, அதில் வளர்ந்த துளசியால் பெருமாளையும் தாயாரையும் பூஜித்து வந்தார். இதில் மகிழ்ந்த பெருமாள் இவருக்குத் தரிசனம் கொடுத்தார். இதனால் இங்குள்ள பெருமாள் புண்டரீகாட்சப் பெருமாள் ஆனார்.

இங்குள்ள பூங்கிணற்றில் பகவானை நோக்கித் தவம் செய்த தாயாருக்கு, பெருமாள் செந்தாமரைக் கண்ணனாய்க் காட்சியளித்தார். எனவே இப்பெருமாள் செந்தாமரைக் கண்ணன் ஆனார்.

இங்குள்ள தாயார் : செண்பகவல்லி (செங்கமலவல்லி என்கிற பங்கயச் செல்வி)

உற்சவத் தாயார் : பங்கஜவல்லி

விமானம் : விமலாக்ருதிவிமானம்

இந்த வைணவக் கோவிலின் தலவிருட்சம் : வில்வமரம். பொதுவாக வில்வமரம் சிவத்தலங்களுக்கான விருட்சமாகும். ஆனால் வில்வ இலைகள் மஹாலெட்சுமிக்குப் பிரியமான ஒன்றாகும். இங்குதான் நாம் சைவ – வைணவ நல்லுறவைப் பார்க்க முடிகின்றது.

கோலம் : கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்

இக்கோயில் கோட்டை போல் அமைக்கப்பட்டுள்ளது. முன் கோபுரம் பூர்த்தியாகாத நிலையில் இக்கோவிலின் பெரிய பிரகாரத்தில் தென்பகுதியில் கல் அறைகள் உள்ளன. இங்கிருந்து ஒலி எழுப்பினால் எதிரொலி தெளிவாகக் கேட்கும். இக்கோயிலுக்கு அருகில் புகழ்பெற்ற ஸ்வஸ்திக் வடிவில் நான்கு மூலைகளைக் கொண்டதாக ஸ்வஸ்திகாகிணறு அமைந்துள்ளது. ஒருபக்கத்தில் இருப்பவரை இன்னொருகரையில் இருப்பவர் காண முடியாதவாறு இக்கிணறு அமைக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீதேவி, பூதேவி, சூரியன், சந்திரன் மற்றும் ஆதிசேஷன்ஆகியோர் மனித உருவில் பெருமாள் பக்கத்தில் நின்று கைங்கர்யம் செய்து காட்சியளிப்பது இங்கு விசேஷமாகும். நாதமுனிகளின் பிரதமசீடரான உய்யக் கொண்டான் மற்றும் எங்களாழ்வான் ஆகியோர் அவதரித்த தலமாகும்.

ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிய மூன்று நாச்சியார்களுக்கு மூன்று திவ்ய தேசங்களில் பெருமை. இதில் ஸ்ரீதேவி நாச்சியாருக்குத் திருவெள்ளறையில் பெருமை. தாயாருக்குப் பெருமையுள்ள இவ்விடத்தில் அவரை வணங்கிய பின்தான் இறைவன் சந்நிதிக்குச் செல்ல இயலும். இங்கு தாயார் பல்லக்கு முன் செல்ல,பெருமாள் பின் செல்வார். மற்ற தலங்களில் பெருமாள் முன் செல்ல, தாயார் பின் செல்வார்.

இங்குள்ள பெருமானைத் தரிசிக்க 18 படிகளைக் கடக்க வேண்டும். இவை கீதையின் 18 அத்தியாயங்களைக் குறிப்பதாகும். கோபுர வாயிலில் 4 படிகள் உள்ளன. இவை நான்கு வேதங்களைக் குறிப்பதாகும். பின் பலிபீடத்தை வணங்கி ஐந்து படிகளைக் கடக்க வேண்டும். இவை பஞ்ச பூதங்களைக் குறிப்பதாகும். இரண்டு வாயில்கள் உள்ளன. தைமுதல் ஆனிவரை உத்தராயணவாசல் வழியாவும், ஆடி முதல் மார்கழி வரை தக்ஷ்ணாயன வாசல் வழியாகவும் பெருமாளைத் தரிசிக்கச் செல்ல வேண்டும்.

இக்கோயிலில் நாழி கேட்டான் வாயில் என்றொரு வாசலும் உண்டு. ஒருமுறை, தனது தற்காலிக உறைவிடத்திற்குச் சென்று திரும்பிய பெருமாளை, மகாலெஷ்மி இவ்வாசலில் மறித்து, அவர் தாமதம் குறித்துக் கேள்வி கேட்டதால், இவ்வாயில் நாழி கேட்டான் வாயில் என்று அழைக்கப்படுகிறது.

இங்கு பலிபீடமே சிறப்பு. கோரிக்கை நிறைவேறினால், பலிபீடத் திருமஞ்சனம் செய்து பொங்கல் படைத்து, பிரார்த்தனையை நிறை வேற்றுகிறார்கள்.

திருச்சி மத்தியப் பேருந்து நிலையத்திலிருந்து சுமார் 20 கி.மீ தொலைவில் திருச்சி - துறையூர் மார்க்கத்தில் உள்ளது.

என் அய்யா நா. மீனவனார் பரந்தாமன் பாமாலை என்ற நூலில் திருக்கோழி குறித்து எழுதிய ஐந்து பாடல்கள்:

1. பொன்னாலான நகைகளை அணிந்த பொற்கொடியின் நாயகனை, ஒலிக்கின்ற கடலில், அரவத்தில் கண்துயிலும் பங்கயக் கண்களையுடைய வெள்ளறையானின் பாதங்களைப் பணியச் சொல்லும் முதல் பாடல்:

**புனையிழைகள் தானணிந்த பொற்கொடியின் மணவாளன்**
**நினைவார்தம் மனமேறி நிலைத்திருக்கும் பெருமானைக்**
**கனையாழிகடலரவில் கண் வளரும் பங்கயக்கண்.**
**தனையுடைய வெள்ளறையான் தாள்பணிவீர் உய்ந்திடவே.**

2.இக்கோவிலின் மதிலுக்குள் திவ்யகந்த, குச, சக்கர, புஷ்கல, பத்ம, வராக, மணிகர்ணிகா ஆகிய ஏழு தீர்த்தங்கள் இருக்கின்றன. இவ்வைணவத் திருப்பதியை, பெரியாழ்வார் 11 பாசுரங்களாலும், திருமங்கையாழ்வார் 13 பாசுரங்களாலும், ஆகமொத்தம் 24 பாசுரங்களால் மங்களா சாசனம் செய்துள்ளனர். இங்கிருக்கும் தாமரைக்கண்ணனின் தாளை வணங்கக் கூறும் இரண்டாம் பாடல்:

**புண்ணியநற் புனல்சாரும் புகழ் ஏழுதீர்த்தங்கள்**
**நண்ணுதிருவெள்ளறை சேர்நலத்தானை ஆழ்வார்தம்**
**பண்ணுருகுபாசுரங்கள் படித்தாரை வாழ்விக்கும்**
**தண்ணாரும் தாமரைக்கண் ணான்தாள் வணங்கிடுமே.**

3.பிரம்மன், சிவன், இந்திரன் இவர்களெல்லாம் மாமலர் என்று சொல்லக்கூடிய அழகிய தாமரை மலர்களைக் கையில் எடுத்துக் கொண்டு, வெள்ளறையில் நிற்கின்ற பெருமாளைப் பார்ப்பதற்கு, சாதாரணமானவர்களின் கண்களுக்குப் புலப்படாமல் வந்து நின்று பணிவதாக, பெரியாழ்வார் தமது பாசுரத்தில் பாடுகிறார். இத்தகைய பெருமைமிகு தலத்தில் செண்பக வல்லித் தாயாருடன் இருக்கும் திருமாலைப் போற்றச் சொல்லும் மூன்றாம் பாடல்:

**இந்திரனார் நான்முகனோடீசன் முதல் இமையவர்கள்**
**மந்திர மாமலர் தூவிமனம்கனியப் பணிந்ததலம்**
**சுந்தரச் செண் பகவல்லிசுடர்க்கொடியாள் உடனிருக்க**
**இந்தநிலம் இருந்தாலும் இறைமாலைப் போற்றுதுமே.**

4.மகாவிஷ்ணு எடுத்த நான்காவது அவதாரம் நரசிம்ம அவதாரம். நரசிங்கத் தோற்றமாய்த் தூணில் வெளிப்பட்டுத் தனது கூர்மையான நகங்களால், கனகன் என்னும் இரணியனின் மார்பைக் கிழித்தவனை, பாரோடு வானையும் சேர்த்து அளந்த பரந்தாமன் திருவடிகளை யார் போற்றி வணங்கினாலும் ஏற்றம் பெறுவது நிச்சயம் எனக் கூறும் நான்காம் பாடல்:

**ஏர்சிந்தவெள்ளறையில் இருந்தமரர் துயர் தீர்க்கும்**
**கார் சிறந்த மேனியனைக் கனகனுடல் கீண்டானைப்**
**பாரோடு வானளந்ந பரந்தாமன் திருவடியை**
**யார் போற்றி வணங்கிடினும் ஏற்றமுறல் நிச்சயமே.**

5.நமக்குத் திருவருள் செய்வதற்காக, வெள்ளறையைத் தேடி வந்த அருள் சுமந்த பெருமானை, அவர்தம் ஒலிக்கும் கழல்கள் அணிந்த தாமரைப் பூப் போன்ற பாதங்களைக் கும்பிட்டு வாழச் சொல்லும் ஐந்தாம் பாடல்:

**திருவருளை நமக்களிக்க வெள்ளறைநன் னகர்தேடி**
**அருள்சுமந்த பெருமானாய் அடியவர்தம் ஆருயிராய்த்**
**தருவயல்சூழ் பதியிருந்துதாமரைப்பூப் போன்றிலங்கும்**
**குரைகழலைப் பணிந்துநிதம் கும்பிட்டுவாழுமினே.**

திருக்குறுங்குடியில் கோயில் கொண்டிருப்பவனே... திருவெள்ளறையில் வசிப்பவனே... சோலைமலை அரசனே... கண்ணபுரத்து அமுதமே... என் துன்பங்களைப் போக்குபவனே... உன்னை இடுப்பிலே தூக்கிக் கொண்டுதங்கள் வீடுகளுக்குச் சென்றுதம் விருப்பப்படி உன்னைக் கொஞ்சி மகிழும் இளம் பெண்கள் மனம் மகிழும்படியாகவும், கண்டவர் கண்குளிரும் படியும், கவி எழுதக் கற்றவர் பலபிள்ளைக் கவிகள் கொண்டுவரும்படி செங்கீரை ஆட வேண்டும்... ஏழுலகத்தின் தலைவனே... நீ இப்படியாக ஆடுக என்று கூறும் பெரியாழ்வாரின் மங்களாசாசனப் பாடல்:

**உன்னையும் ஒக்கலையில் கொண்டுதம் இல் மருவி**
**உன்னொடுதங்கள் கருத்தாயினசெய்துவரும்**
**கன்னியரும் மகிழக் கண்டவர்கண்குளிரக்**
**கற்றவர்தெற்றிவரப் பெற்றஎனக்கு அருளி**

மன்னுகுறுங்குடியாய், வெள்ளறையாய் மதில்சூழ்
சோலைமலைக்கரசே, கண்ணபுரத் தமுதே
என்அவலம் களைவாய், ஆடுகசெங்கீரை
ஏழுலகும் உடையாய், ஆடுக ஆடுகவே. (தொடரும்)

## சீனத்தில் சிவன் கோயில் - நகரத்தார்களின் பங்கு

(மா. இளங்கோ, குழிபிறை)

ஐநூற்றுவர், நானாதேசிகள் இன்றும் இருக்கிறார்களா? இன்றைய செட்டிநாட்டை வாழ்விடமாகக் கொண்டு வாழும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் முன்னோர்களே திசையாயிரத்து ஐநூற்றுவர் எனப் பல சான்றுகள் காட்டுகின்றன.

கல்வாசல்நாட்டுச் சுந்தர பாண்டியபுரத்து திசையாயிரத்து ஐநூற்றுவர் என்ற பிரான்மலைக் கல்வெட்டு வரிகளாலும், நகரத்தார் கோயில்களில் ஒன்றான மாத்தூர் கோயிலின் இறைவன் பெயர் ஐநூற்றீசர் என்று அழைக்கப்படுவதாலும் உறுதிப் படுத்திக் கொள்ளலாம்.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சமூகம், சிவபெருமானை இறைவனாக முன்னிறுத்தி 9 பெரும் பிரிவுகளைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு பிரிவும் அல்லது கோயிலும் பல உட்பிரிவுகளைக் கொண்டுள்ளது. ஒவ்வோர் உட்பிரிவுகளைச் சேர்ந்தோர்களையும் அடையாளப்படுத்துகையில் நிலப்பரப்பின் அடிப்படையிலேயே அழைக்கப்படுகின்றனர். அந்த நிலப்பரப்பின் பெயர் பெரும்பாலும் அவர்கள் முன்னோர்களின் வாழ்விடமாக இருந்திருக்கலாம்.

எடுத்துக்காட்டாக,

கேரளசிங்கவளநாடாகிய பிரம்பூர் நாட்டில், மாற்றூரான வீரபாண்டியபுரத்தில், உறையூருடையார் (மாற்றூர் கோயிலின் உட்பிரிவுகளில் ஒன்று). கேரளசிங்கவளநாடாகிய வீரபாண்டியபுரத்தில், சிறுகுளத்தூருடையார் (வைரவன் கோயிலின் உட்பிரிவுகளில் ஒன்று).

சோழர்கள் காலத்தில் நாடு மேலாண்மை வசதிக்காகப் பல பிரிவுகளைக் கொண்டிருந்தது. நாடு, மண்டலம், வளநாடு, கூற்றம், உள்நாடு, கிராமம் எனப் பிரிக்கப்பட்டிருந்தது. மண்டலமும் வளநாடும்

மன்னனின் சிறப்புப் பெயரால் அழைக்கப்பெற்றன. சோழர்களின் தலைசிறந்த, பல வெற்றிகளைப் பெற்ற, தஞ்சைப் பெரியகோயிலைக் கட்டியவன் முதலாம் இராசராசன். முதலாம் இராசராசனின் சிறப்புப் பெயர்களில் ஒன்று கேரளசிங்கன். அவனது சிறப்புப் பெயரால் அமைந்தது தான் கேளரசிங்க வளநாடு ஆகும்.

கேரளசிங்கவளநாட்டின் எல்லைகளும் இன்றைய செட்டிநாட்டின் எல்லைகளும் ஒன்றுதான். கேரளசிங்கவளநாடு என்ற பெயரானது ஆயிரமாவது ஆண்டில் இருந்தே வழங்கி வருகிறது. புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் தாலுகாவைச் சேர்ந்த முனசந்தை என்ற இடத்தில் எடுக்கப் பெற்ற கி.பி. 9ம் நூற்றாண்டைச்சார்ந்த கல்வெட்டு ஒன்று புதுக்கோட்டை அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அதில் முனசந்தை ஏரி (கண்மாய்) வெட்டுவதற்கு ஐநூற்றுவர்கள் அளித்த கொடைகள் பற்றி வருகிறது.

ஆகையால் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இப்பகுதிகளுக்குக் குடியேறிவிட்டனர் என்பது உறுதியாகிறது. நகரத்தார்கள் பாண்டிய நாட்டிற்கு வந்து குடியேறியது தனி ஆய்வு என்பதால், அது தொடர்பான செய்திகளை நாம் இங்கு எடுத்துக் கொள்ளவில்லை.

நகரத்தார்கள் தங்களைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது தங்களை அல்லது தங்களின் முன்னோர்களின் முந்தைய வாழ்விடத்தின் பெயர் அடிப்படையிலேயே குறிப்பிடுகின்றனர்.

நகரத்தார் திருமணங்களில் எழுதப்படும் இசை குடிமானம் என்னும் திருமண உறுதி ஆவணங்களில் கேரளசிங்கவளநாடாகிய என்ற சொற்றொடர் எக்காலத்திலும் மாறாததாக, மாற்றப்படாததாக உள்ளது. தாங்கள் வசிக்கும் பகுதியைக் கேரளசிங்கவளநாடு என்று அன்றிலிருந்து இன்று வரை குறிப்பிட்டு வருகிறார்கள். கல்வெட்டுகளில் கேரளசிங்கவளநாடு என்ற சொற்றொடர் குறிப்பிடுவதெல்லாம் இன்றைய நாட்டுக்கோட்டை நகரத்தார்களையே. அதே கேரளசிங்கவளநாடு என்ற சொற்றொடர் இன்றும் நகரத்தார்களிடம் மட்டுமே பயன்பாட்டில் உள்ளது.

**சுமத்திரா நகரத்தார் கல்வெட்டு மற்றும் தொடர்பு**

கி.பி. 1088 ஐச் சார்ந்த தமிழ்க் கல்வெட்டு ஒன்று லோபு துவா அல்லது பாரஸ் கல்வெட்டு 1873ல் இந்தோனேசியாவில் கண்டுபிடிக்கப் பெற்றது. Lobu Tua Inscription / Barus Inscripition - Lobu Village Andam Dewi District North Sumatra Province, Indonesia 26 வரிகள் கொண்ட கல்வெட்டு.

**குடி நிறந்த**
**விளங்கு திசை ஆயிர (த்து)**
**ஐநூற்றுவரோம்**
**நம் மகனார் நகர சேனாப,**
**தி நாட்டுசெட்டி**
**யார்க்கும் பதிணெண்பூமி**

என்ற வரிகள் தெளிவாக இன்றைய நாட்டுக்கோட்டை நகரத்தார்களையே சுட்டிக்காட்டுகிறது.

விளங்கு திசை ஆயிர (த்து) ஐநூற்றுவரோம் என்ற திசையாயிரத்து ஐநூற்றுவர் என்ற வரியும், நகர சேனாபதி நாட்டுசெட்டி யார்க்கும் பதிணெண்பூமி என்ற வரியும் மிகத் தெளிவாக நாட்டுக்கோட்டை நகரத்தாரையே சுட்டும்.

**இலங்கையில் ஐநூற்றுவர் கல்வெட்டுகள்**

ஜப்பான் நாட்டைச் சேர்ந்த பேராசிரியர் நொபொரு கராஷிமா, பேரா.எ.சுப்பராயலு, பேரா.ப.சண்முகம் ஆகிய மூவரை உள்ளடக்கிய எட்டுப் பேர்கள் கொண்ட ஆய்வுக்குழு இலங்கையில் களஆய்வில் ஈடுபட்டு, கல்வெட்டுகளைப் படி எடுத்தார்கள். அவற்றில் நான்கு கல்வெட்டுகள் ஐநூற்றுவர் தொடர்பானவை. இக்கல்வெட்டுகள் கி.பி. 1100 - 1150 ஆண்டு காலப்பகுதியைச் சார்ந்தவை. பிரான்மலைக் கல்வெட்டில் பொறிக்கப்பட்டிருக்கிற சொற்கள் இலங்கைக் கல்வெட்டிலும் பார்க்க முடிகிறது.

அவையாவன,

**திசையாயிரத்து ஐநூற்றுவர், ஐயப்பொழில் பரமேஸ்வரி செட்டி புத்திரன்,. பதிணென் பூமி என்பனவாம்.**

இச்செய்திகள் மூலம் திசையாயிரத்து ஐநூற்றுவர் வணிகக்குழு

இந்து மாக்கடலில் ஆளுமை செலுத்தியதை அறியலாம். தமிழகத் துறைமுகங்களில் இருந்து புறப்படும் கலங்கள், சீனாவின் குவாங்சோ துறைமுகத்தை அடையும் முன்னர் இடையில் இளைப்பாறும் இடமாக இந்தோனேசியத் துறைமுகங்களைப் பயன்படுத்தின. தங்கள் கலங்களுக்குச் சார்பான பருவக்காற்று, உணவு, தண்ணீர் சேகரிப்ப தற்காகவும் தமிழ் வணிகர்கள் இந்தோனேசியத் துறைமுகங்களைப் பயன்படுத்தினர். பன்னாட்டு வணிகர்களும் கூடும் இடமாக இருந்ததால் வணிகமும் இந்தோனேசியாவில் சிறப்பாக நடை பெற்றது என அறியலாம். வணிகர்கள் செலுத்த வேண்டிய வரிகள் இக்கல்வெட்டுகளில் பொறிக்கப் பெற்றுள்ளன.

2018 ஆம் ஆண்டு புதுக்கோட்டை மாவட்டம் செல்லுகுடி என்ற கிராமத்தில் 10 அல்லது 11 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டு கண்டுபிடிக்கப் பெற்றது. கிழக்கு ஆசிய நாடுகளுடன் கொண்ட தொடர்புகளாலும் சோழப்பேரரசுக்கும் கிழக்கு ஆசிய நாடுகளுடன் தூதுவர்களாகச் செயல் பட்டதாலும் திசையாயிரத்து ஐநூற்றுவர் குழுவுக்கு இராசேந்திர சோழன் தந்த சிறப்புச் சலுகைகளைப் பற்றி இக்கல்வெட்டு தருகிறது. திசையாயிரத்து ஐநூற்றுவரின் பெருமைகள் மற்றும் கல்தூணின் மேற்பகுதியில் சங்கு, கழுகு உருவங்கள் பொறிக்கப் பெற்றுள்ளன.

வலிமை நிறைந்த ஆளுமைத்திறன் மிகுந்த அமைப்பாக இருந்த காரணத்தால் மட்டுமே மன்னர்களிடம் அணுக்கமாக இருக்க முடியும்.

*(தொடரும்...)*

---

28.11.2020 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வில் சிலப்பதிகாரம் - ஊர்சூழ்வரி பற்றி இராமசாமி தமிழ்க்கல்லூரிப் பேராசிரியர் அன்பு மெய்யப்பன் சொற்பொழிவாற்றினார்.

# கலித்தொகையில் புகுமுகம் புரிதல்

வ.மீனாட்சி, உதவிப் பேராசிரியர்
(நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி, கோவிலூர்)

ஐந்திணை என்பது உளமொத்த காதலாகும். இக்காதல் உருவாகும் போது கூடலும் பிரிதலும் ஊடலும் இருத்தலும் இரங்கலும் நிகழக் கூடியனவாகும். வயது வந்த ஆணும் பெண்ணும் தம்முள் நட்புக் கொண்டு ஒழுகிக் காதல் செய்வதையும் அதனைப் பிறர் அறியாமல் நிகழ்த்துதலையும் களவு என அழைத்தனர். அத்தகைய களவு வாழ்க்கையின் போது தலைமக்களிடையே பலவகையான உணர்வுகள் தோன்றுகின்றன. தலைமக்களின் முதல் சந்திப்பின் போது நிகழும் புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடானது கலித்தொகையில் அமைந்துள்ள முறை குறித்து ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**காட்சி என்னும் முதல் நிலைக்கண் நிகழும் மெய்ப்பாடுகள்**

தலைவனும் தலைவியும் முதன்முதலாகச் சந்திக்கும் போது அவர்களிடம் காதல் தோன்றுகின்றது. அந்தக் காதல் உணர்ச்சியின் வெளிப்பாடாகத் தலைவியிடம் புகுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல், நகுநயம் மறைத்தல், சிதைவு பிறர்க்கின்மை என்னும் நான்கு மெய்ப்பாடுகள் தோன்றும் என்பதை,

**புகுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல்,**
**நகுநயம் மறைத்தல், சிதைவு பிறர்க்கு இன்மையொடு**
**தகுமுறை நான்கே ஒன்றென மொழிப (தொல்.நூ.1207)**

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் கூறுகின்றார். தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் கண்களால் கண்டு காதலுற்ற நிலையில் தலைவியிடம் இம்மெய்ப்பாடுகள் தோன்றுவதால் இவை காட்சி என்னும் முதல் நிலைக்கண் நிகழும் மெய்ப்பாடுகளாகும்.

**புகுமுகம் புரிதல்**

இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவியிடம் இம்மெய்ப்பாடானது தோன்றுகின்றது. புகுமுகம் புரிதல் என்பதற்கு, **தலைமகன் புணர்ச்சிக் குறிப்பினனாய்ப் புகும் முகத்தினை மாறுபடாது பொருந்துதல்** என இளம்பூரணரும் **ஒருவனும் ஒருத்தியும்**

எதிர்ப்பட்டவழித் தன்னை அவன் நோக்குதற்கண் விரும்பும் உள்ள நிகழ்ச்சி; புகுதலென்பது, தலைமகன் நோக்கிய நோக்கெதிர் நோக்குதலை முகநோக்குதல் என்பவாகலின் இந்நோக்கினை முகமென்றா னென்பது புரிதலென்பது, மேவுதல் என்றவாறு; அஃதாவது, தலைமகன் காண்டலைத் தலைமகள் வேட்டல் என்றவாறாம். மற்றிது தலைமகற்கு உரித்தன்றோவெனின், அவன் தான் காண்பினல்லது தற்காண்டலை நயவான்; அது தலைமையன் றாகலினென்பது எனப் பேராசிரியரும் உரைப்பர்.

முதன் முதலில் தலைமக்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் சூழ்நிலை ஏற்படும். அவ்வாறு சந்திக்கும் போது தலைவனின் எண்ணத்திற்குத் தலைவி உடன்பட்டு அவனின் பார்வைக்குத் தனது மனவிருப்பத்தை மலரும் முகத்தால் வெளிப்படுத்துதலே புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடாகும்.

இருவர் சந்திப்பின் ஆரம்பமே புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடாகும். இருவர் பார்த்துக் கொள்ளும் நேரம் தலைவன் தலைவியின் மனதை அறிய முற்படுவான். அப்போது அவளின் காதல் உணர்ச்சியானது முறுவலாக வெளிப்படுகின்றது. இதுவே தலைவியின் மனதைத் தலைவன் அறிந்து கொள்ள ஏதுவாகின்றது. இக்காதல் மெய்ப்பாட்டில் கண்களும் இதயமும் முதன்மை பெறுகின்றன.

கண்களாலும் இதயத்தாலும் தோன்றும் காதல் என்பது உண்மையான அன்புப் பிணைப்பாகும். அது கண்களில் மலர்ந்து இதயத்தில் கனிய வைக்கப்படுகின்றது என்னும் மெர்சி வேலன்சியின் கூற்று இங்கு சுட்டத்தக்கது.

தலைவன், தலைவியின் உள்ளம் ஒன்றுபடுவதற்கு அவர்கள் பரிமாறிக் கொண்ட பார்வை தான் காரணம் என்பதைத் தொல்காப்பியர்,

நாட்டம் இரண்டும் அறிவு உடம்படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும் (தொல்.நூ.1042)

என்னும் நூற்பாவில் கூறுகின்றார்.

கலித்தொகையில் இம்மெய்ப்பாடானது நான்கு பாடல்களில் (கலித். 37:2-5, 102:5-8, 105:50-52, 105:66-68) இடம் பெற்றுள்ளது.

தலைவன் ஒருவன் தினமும் வயமான் அடியைத் தேடுவது போல வந்து தலைவியைப் பார்த்துக் கொண்டே செல்வதை,

**கயமலர் உண்கண்ணாய்! காணாய்; ஒருவன்**
**வயமான் அடித்தேர்வான் போல, தொடை மாண்ட**
**கண்ணியன் வில்லன், வரும் என்னை நோக்குபு,**
**முன்னத்திற் காட்டுதல் அல்லது தான் உற்ற**
**நோய் உரைக் கல்லான் பெயரும்மன் பல்நாளும் (கலித். 37:1-5)**

என்னும் பாடலடிகள் உரைக்கும். இதில் தலைமக்கள் இருவரும் ஒருவரை ஒருவர் தினமும் பார்த்துக் கொள்வதால் இங்கு புகுமுகம் புரிதல் என்னும் மெய்ப்பாடானது தோன்றுகின்றது.

இருவரும் ஒருவரை ஒருவர் சந்திக்காமல் ஒருவர் மட்டும் மற்றவரைப் பார்த்த சூழலிலும் இம்மெய்ப்பாடு தோன்றியுள்ளது. முதன் முதலாகத் தலைவியைக் கண்ட தலைவன் அவளைப் பற்றிப் பாங்கனிடம் கூறுவதாக ஒரு பாடல் (கலித். 102:5-8) அமைந்துள்ளது. இப்பாடலில் தலைவி தன் தோழிகளுடன் விளையாடிக் கொண்டுள்ளாள். அவ்வழியே செல்லும் தலைவன் அவளைக் கண்டு என் உடலோடும் என் உயிர்க்குள்ளும் கலந்தவள் ஆகிய இவள் யார் எனப் பாங்கனிடம் வினவுகின்றான். இதில் தலைவன், தலைவியைக் கண்ட விடத்து அவனிடம் புன்னகை தோன்றுகின்றது.

இதே போன்று தலைவனைக் கண்டவுடன் தலைவிக்குப் புன்னகை அரும்பியதை,

**வெல்புகழ் உயர்நிலைத் தொல் இயல் துதைபுதை துளங்கு இமில்**
**நல்லேறு கொண்ட பொதுவன் முகன் நோக்கி**
**பாடுஇல ஆயமகள் கண் (கலித். 105:50-52)**

என்னும் பாடலடிகள் விளக்கும். பொதுவாக ஒருவரைக் கண்டு மற்றொருவர் புன்னகை புரிதல் என்பது இயல்பான ஒரு மெய்ப்பாடாகும். இதுவே காதலர்களுக்கிடையே நிகழ்கின்ற பொழுது அது காதலுக்குரிய நுழைவாயிலாக அமைகின்றது.

## முடிவுரை

கலித்தொகையில் தலைமக்கள் இருவரும் புகுமுகம் புரிதல், தலைவன் மட்டும் புகுமுகம் புரிதல், தலைவி மட்டும் புகுமுகம் புரிதல்

என்னும் மூன்று நிலையில் இம்மெய்ப்பாடு காணப்பெறுகின்றது. தலைவன் நோக்கிய வழித் தலைவிக்கும் தலைவி நோக்கிய வழி தலைவனுக்கும் இடையே ஏற்படும் பார்வைப் பரிமாற்றமே இம்மெய்ப்பாடு தோன்றக் காரணமாகின்றது. அதனால் ஒருவர் மற்றொருவர் மீது கொண்ட அன்பு எனும் அகமனச் செயல்பாட்டின் உளவியல் தன்மை புலப்படுகிறது.

**சான்றெண்விளக்கம்**

1. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பியம் - மெய்ப்பாட்டியல் உரைவளம் ப.53

2. மேலது ப.54

3. மு.பொன்னுசாமி, சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள் ப.92

## மகமை - சொற்பொருள் விளக்கம்

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி, புதுச்சேரி - 9)

குவலயம் போற்றும் கோவிலூர் ஆதீனத் தெய்வத்தொண்டின் ஒரு கூறு, கோவிலூர் மடாலயம் நடத்தும் மாத இதழான திருநெல்லை வெளியீடாகும். இந்த நவம்பர் மாத (2020) இதழில் - நகரத்தார் பங்களிப்பான *சீனத்தில் சிவன் கோயில்* என்ற கட்டுரையில் மகமை என்ற சொல்லுக்கான குறிப்பு சிறப்பாக இருந்தது, அச்சொற் பொருள் பற்றிய மேலும் உரிய கருத்தாடலை (Discourse) உணர்ந்து கொள்ளும் பொருட்டு இச்சிறு கட்டுரை அமைகிறது.

மகமை என்பது பொதுவாகக் கோயிலுக்கு நன்கொடையாகத் தருவதைக் குறிக்கும். அந்தக் கைங்கரியம் ஒரு மகத்தான மகிமையுடையதாகும்.

இச்சொல்லை, குழிபிறை மா.இளங்கோ அவர்கள் மகனுக்குச் செய்வது போல இறைவனுக்குச் செய்வதான கருத்துடையது என்பதாக மகன்+மை எனப் பிரித்துப் பொருத்தமாகப் பொருள் கூறினார்.

பெற்றோர் மகனுக்குச் சொத்து சேர்த்து அளிப்பதான முறை நடப்பியலில் உண்டு போல இறைவனுக்குச் செய்வது என்பதாகக் கூறிய கருத்து ஏற்புடையது ஆகும்.

இங்ஙனம் கூறிய கருத்துடன் மகனைப் போல மகளுக்கும் சொத்தில் பங்குண்டு என்ற சட்டதிட்டத்தின்படி உணரும் போது மகள்+மை எனப் பிரித்துப் பொருள் காண்பதும் பொருந்தும் எனலாம்.

செட்டிநாட்டைப் பொறுத்தமட்டில் பெண் மக்கட்கான சீதனம் அளித்தல் தனித்துவம் வாய்ந்ததாகும். அந்நிலையில் சொத்து சேர்த்து மகனுக்கும் மகளுக்கும் அளிப்பதான சமமான சிறப்பில் மகமை என்ற சொல்லை மக+மை என்பதாகப் பிரித்து உணரலாம்.

மக-என்றாலே ஆண் பெண்ணான இரு குழந்தையையும் குறிக்கும். தொல்காப்பியத்தில் மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை எனக் கூறுவதால் (எழுத்ததி - உயிர்மயங் 16) மக என்பது ஆண், பெண் குழந்தைகளுக்கான பொதுச் சொல் எனத் தெரிகிறது. உலகியல் வழக்கிலும் மகப்பேறு நில்யம் எனக் கூறுவதாகப் பொதுவானதாக உள்ளது. எனவே மகமை என்ற சொல்லை மகன்+மை என்றும் மகள்+மை என்றும் பிரித்துப் பொருத்தமாகப் பொருள் காணலாம், மகன் போல் மகள் மறுவாசிப்பாம். எனவே இறைவனுக்குச் செய்யும் நன்கொடைபற்றியதை மகன், மகள்களுக்குச் செய்வது போல எனப்புதுப் பொருளைக் குழிபிறை இளங்கோ அவர்கள் திருநெல்லை வழி உணர்த்திக் காட்டியதாக உணரலாம்.

குறிப்பாகவும் சிறப்பாகவும் செட்டி நாட்டைப் பொறுத்தமட்டில் பிள்ளை கூட்டுதல் என்ற முறையில் ஆண் மகனைக் கூட்டலையே பெருவழக்காக உணர்வதை மகன்மை கொள்ளல் என்பர்.

பெரியபுராணத்தில் இளம் குழந்தையான சுந்தரரை நரசிங்கமுனையரையன் என்ற சிற்றரசர் மகன்மையாகக் கூட்டிக் கொண்ட வரலாறு சேக்கிழாரால் கூறப்படுள்ளது. நம்பியாரூரர் என்ற சுந்தரராம் குழந்தையை நரசிங்க முனையர் என்னும் நாடுவாழ் அரசர் அன்பினால் மகன்மை கொண்டார் என்பது சேக்கிழார் வாக்கு, (தடுத்தாட்-5)

ஆண்மகவைப் போலப் பெண் மகவைப் பிள்ளை கூட்டிக் கொள்ளும் புரட்சியான கருத்தைத் தமிழ்ச் செம்மல் வ.சுப.மாணிக்கனார் தாம் எழுதிய நெல்லிக்கனி நாடகத்தில் கதாபாத்திர உரையாடலில் வற்புறுத்துகிறார்.

இந்தப் புதுமையையும் சேக்கிழார் சுந்தார் வரலாற்றில் கூறியுள்ளார். நாட்டியத்தான் குடி எனும் ஊரின் கோட்புலி நாயனார் தம் மகள்கள் சிங்கடி, வனப்பகை எனும் இருவரையும் சுந்தரரிடம் அடிமையாக ஏற்றுக் கொள்ள வேண்டினார். அப்போது சுந்தரர் இவர் எனக்குத் தூய மக்கள் எனக் கொண்டப் படிமகண்மை யாக்கொண்டார் என்கிறார் சேக்கிழார். (ஏயர்கோன்புரா-39)

ஆக மகமை என்பது கோயிலுக்கு விரும்பிச் செய்யும் நன்கொடை, என்பதாகப் பொதுவாய்க் கூறினும் அந்நன்கொடை, ஆண் பெண்ணாம் மகவுக்குச் செய்வது போன்ற சமநிலைப் பாங்கில் செய்யும் சிறப்பை உணர்த்துவதால் மகன்மை என்ற ஆண் மகனுக்கான வாசிப்புப் போலப் பெண் மகளுக்குமான மறுவாசிப்பையும் உலகியல் நிலையிலும் ஆன்மீக நிலையிலும் உணரலாம் என்க!

## கொற்றவாளீசர் வணக்கப் பாமாலை

(வெ.குப்பான் செட்டி)

1. காரைக் குடிநகரைப் பார்த்தபடி செம்பையூற்று
நிரைத் தரும்கொற்ற வாளீசர் – பூரத்
திருநாளில் தேர்ஏறி நல்வளங்கள் தந்தே
திருவருளும் தந்தருள் வார்!

2. காளையார் கோயில் அரசனுக்கு நற்கொற்ற
வாளினைத் தந்த திருக்கொற்ற – வாளீசர்
கொற்றவாள் தந்ததால் கொற்றவாள் ஈசரெனப்
பெற்றபேர் நின்றுலவும் நீண்டு!

3. ஒருநாமம் ஒருருவம் இல்லானை நாளும்
திருநாமம் ஆயிரம் பாடிப் – பரவிடுவோம்!
மாணிக்க வாசகரின் தெள்ளேனப் பாடல்களைத்
தேனமுதத் தீந்தமிழில் கேட்டு!

4. தில்லைச்சிற் றம்பலனே! தென்மதுரைக் கோவிலிலே
நல்லருமை நாயகனே! எந்நாளும் – எல்லையிலா
நல்லருளை வேண்டினோம்! கொற்றவாள் ஈசனே!
நல்லருள் தந்தருள் வாய்!

5. செந்தழலைக் கையேந்திச் செம்மேனி ஆனவனே!
செந்தமிழ்போல் சீரிளமை கொண்டவனே! பைந்தமிழைக்
கேட்டுமலர்த் தாள்வீசி ஆடுகின்ற கொற்றவனே!
வாட்டமிலா வாழ்வுதரு வாய்!

## திருநெல்லை அம்மன் வணக்கப் பாமாலை

1. கோவிலூர் ஊருக்குப் பேர்கொடுத்த கோவிலின்
தேவி திருநெல்லை அம்பாளை – நாவிலே
நாளும் பெயர்சொல்லி நாம்தொழுதால் நற்செல்வம்
நாளும் பெருகுமே நன்கு!

2. திருநெல்லை அம்மன் கருவறைக் கூரை
தரைமட்டம் ஆனதால், தெய்வத் – திருவுள்ளம்
கொண்டநம் ஆண்டவர் கற்பணி செய்திடத்
தொண்டுள்ளம் தந்தவள் நீ!

3. திருமடம் கட்டிடும் கால்கோள் விழாவில்
திருநெல்லை அம்பாள் சிறுமி – உருவத்தில்
தேங்காயும் வெற்றிலையும் தந்த திருவருளால்
பாங்காய்த் திகழும் மடம்!

4. தாயாகி நின்றுலகைக் காக்கும் திருநெல்லை
நாயகியே! நல்ல தவக்கொழுந்தே! – தீயாய் நீ
தீயவரைச் சுட்டெரித்து நல்லோரைக் காத்திடவே
தாயாய் நீ வந்தருள் வாய்!

5. அம்பாளை, எங்கள் திருநெல்லை அம்பாளை,
செம்பாதி பெற்றவளை; சீராரும் – எம்பெருமான்
நல்லருளைத் தந்த திருநெல்லை அம்பாளை
எல்லோரும் போற்றிடு வோம்!



## திருவிளையாடற்புராணம்

### நாரைக்கு முக்தி கொடுத்தது

பாண்டிய நாட்டின் தெற்குப் பகுதியிலே மாடங்கள் நிறைந்த ஊர் ஒன்று இருந்தது. அங்கே அழகான தாமரைக்குளம் ஒன்று இருந்தது. அக்குளத்தில் வாழும் மீன்களைக் கொத்தியுண்டு ஒரு நாரை வாழ்ந்து வந்தது.

சில நாட்கள் மழை பெய்யாததால் அந்தத் தாமரைக் குளத்திலே நீர் வற்றிப் போயிற்று. தனக்கு இரை கிடைக்க வழியில்லாமல் போனதால் நாரை ஒரு காட்டுக்குச் சென்று சோர்ந்து விழுந்தது. அந்தக் காட்டிலே ஜீவன் முக்தர்களான ரிஷிகள் பலர் வசித்து வந்தார்கள். அம் முனிவர் கூட்டத்திலே சிவானந்த மயமாகிய சத்தியன் என்ற தவசிரேஷ்டர் இருந்தார். அதே கானகத்தில் சதுரமாக அமைந்து படித்துறைகள் அமைக்கப்பட்ட தடாகம் ஒன்று இருந்தது. அதன் கரையிலே சந்தியாமடம் இருந்தது. அந்தத் தடாகம் அதோ தீர்த்தம் என்று சொல்லப்பட்டது. அந்தக் குளத்தைச் சுற்றிலும் நன்மணம் வீசும் இனமலர்கள் பூக்கும் பாதிரி, வேங்கை, வஞ்சி, குரா, மரா, முருக்கு, மருது முதலிய மரங்கள் வளர்ந்திருந்தன.

ரிஷிகள் அந்தத் தடாகத்திலே நீராடும் பொழுது மூழ்கி எழுந்தனர். அப்போது அவர்களது புறத்திலே சாய்ந்துகிடந்த சடைக் கற்றையிலே மீன்கள் பாய்ந்து இந்தத் தவ முனிவோரின் உடம்பைத் தீண்டுவதற்கு இந்த மீன்கள் என்ன தவம் செய்தனவோ! நான் இவற்றைத் தின்னக் கூடாது என்று எண்ணி இரையை வெறுத்திருந்தது.

நீராடிக் கரையேறிய முனிவர்கள் எல்லாரும் தங்கள் நித்திய கர்மாவை முடித்துவிட்டுச் சந்தியா மடத்திலே அமர்ந்து சோமசுந்தரப் பெருமானின் மதுரைப் புராணத்தை ஓதி வந்தனர். அப்போது சொக்கலிங்க மூர்த்தியின் சிறப்பையும், மதுரையின் பெருமையையும் பொற்றாமரைக்குளத் தீர்த்தத்தின் மகிமையையும், பெருமானின் திருவிளையாடல்களையும், அம் மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தங்களை அடைந்தவருக்கு சோமசுந்தரப் பெருமான் எழுந்தருளி வந்து அருள்புரிவர் என்னும் இந்தப் புனிதமான விஷயங்களையெல்லாம்

நாரையும் நன்றாகக் கேட்டுக் கொண்டது. உடனே நாரைக்கு அறியாமை நீங்கியது; வினைத் தொடர்பு அறுந்தது; மெய்யுணர்வு தோன்றியது. சிவபக்தி இழுத்துச் செல்லப் பறவை மதுரையம்பதி சேர்ந்தது. பொற்றாமரைக்குளத்திலே நீராடியது; சோமசுந்தரப் பெருமானை வணங்கி விமானப் பிரதட்சனம் செய்தது. பெருமாள் தனது அருள் திருக்கண்ணால் நோக்கினார். நாரையும் கருணாமூர்த்தியின் திவ்யரூபத்தைத் தியானம் செய்தது.

நாரை இவ்வாறாகப் பதினைந்து நாட்கள் நியமம் தவறாமல் வழிபாடு செய்து வந்தது. பதினாறாவது நாள் பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடச் சென்ற போது அதிலே துள்ளிய மீன்களை இரை கொள்ள நினைத்தது. உடனே பெருமான் அருளால் அறிவு பெற்றது. அந்தோ! இத் திருக்குளத்தில் வாழும் மீன்களைத் தின்னும் எண்ணம் உண்டாயிற்றே; என்ன பரிதாபம்! இப்படியிருந்தால் என்னுடைய பிறவித் துன்பம் எப்போது ஒழியும்? என்று கருதி மிகவும் வருத்தப்பட்டது. இவ்வாறு நினைத்த நாரை மீன்களை உண்ணாது அங்கேயே இருந்துவிட்டது. அதனது கடுமையான விரதத்தைக் கண்டு மகிழ்ந்த சோமசுந்தரப் பெருமான் நாரை எவ்வாறு தன்னை அதன் மனதில் தியானித்ததோ, அதே உருவத்தில் அதன் முன்பு தோன்றினார். எனது அன்புக்குகந்த பறவையே! வேண்டும் வரம் யாது? சொல்வாய் என்று திருவாய் மலர்ந்தருளினார்.

செங்கால் நாரையும் பெருமான் திருமுன்பு விழுந்து வணங்கி, அண்ணலே! இந்தப் பிறவியைப் போக்கி அடியேனையும் சிவலோகத்திலே சேர்த்துக் கொண்டருள வேண்டும். மற்றுமொரு விண்ணப்பம். எனது இனத்தைச் சேர்ந்த பறவைகளும் வேறுபறவைகளும் இந்தத் தீர்த்தத்திலே மீன்கள் இரையெடுத்தால் அவற்றுக்குப் பெரும் பாவம் வந்து சேரும். ஆதலால், இத்திருக்குள நீரில் எப்போதும் மீன்கள் இல்லாதபடி அருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டது. சொக்கநாதப் பெருமானும் அவ்வாறே வரம் வழங்கி மறைந்தருளினார்.

நாரையும், நான்கு புறங்களும் மூன்று கண்களும் கொண்ட சிவரூபம் பெற்று, தேவர்கள் மலர்மாரி பொழிய விமானத்தில் ஏறியது. தேவ துந்துபிகள் முழக்கம் செய்யச் சிவலோகத்தை அடைந்து நந்தி கணங்களுள் ஒன்றாகத் திகழ்ந்தது.

பொற்றாமரைத் திருக்குளம் அன்றிலிருந்து மீன்கள் ஒழியப்பெற்று விளங்கியது.

சுகுணபாண்டியன் தனது பாண்டித் திருநாட்டிலே தருமமெனும் பயிரை நன்கு வளர்த்து அதன் பயனை அனுபவிக்கும் பொருட்டு சுவர்க்கலோகம் சேர்ந்தான்.

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

**(ம. கார்மேகம்)**

### வெருவந்த செய்யாமை

**(அரசன் தானும் தன் குடிமக்களும் அஞ்சும் தொழிலைச் செய்யாதிருத்தல்)**

**1. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்**
**ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.**

தக்காங்கு நாடி – தக்க முறையில் ஆராய்ந்து; தலைச் செல்லா வண்ணத்தால் – மீண்டும் அச்செயலில் ஈடுபடாத வண்ணம்; ஒத்தாங்கு – குற்றத்திற்கு ஏற்றவாறு; ஒறுப்பது வேந்து – தண்டிப்பவனே வேந்தன் ஆவான்.

குற்றம் செய்தவனைத் தக்க முறையில் ஆராய்ந்து மீண்டும் அச்செயலில் ஈடுபடா வண்ணம் செய்த குற்றத்திற்கு ஏற்றவாறு தண்டிப்பவனே வேந்தன் ஆவான்.

**2. கடிதுஓச்சி மெல்ல எறிக நெடிது ஆக்கம்**
**நீங்காமை வேண்டு பவர்.**

கடிது ஓச்சி – தண்டிக்க நினைத்தால் கடுமையானவர் போல் தொடங்கி; மெல்ல எறிக – மென்மையாகச் செய்ய வேண்டும்; நெடிது ஆக்கம் – நிறைந்த ஆக்கம்; நீங்காமை வேண்டுபவர் – நீங்காமல் நிற்க விரும்புபவர்.

தன்னிடம் நிறைந்த செல்வம் நீங்காமல் நிறைந்து நிற்க விரும்பும் அரசன் தண்டனை வழங்க நினைத்தால் கடுமையானவர் போல் தொடங்கி மென்மையாகச் செய்ய வேண்டும்.

ஓச்சி – வினை எச்சம்; எறிக – வியங்கோள் வினைமுற்று

**3. வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ஆயின்**
**ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.**

வெருவந்த செய்தொழுகும் – குடிமக்கள் அஞ்சும்படியான செயல்களைச் செய்து நடக்கும்; வெங்கோலன்ஆயின் – கொடுமை

யானவன் ஆனால்; ஒருவந்தம் - ஒருதலையாக; ஒல்லைக் கெடும் - விரைந்து கெடுவான்.

குடிமக்கள் அஞ்சும்படியான செயல்களைச் செய்யும் கொடுமையானவனாக அரசன் இருந்தால் அவன் தானாகவே விரைந்து கெடுவான்.

வெங்கோலன் - பண்புத் தொகை.

**4. இறைகடியன் என்று உரைக்கும் இன்னாச்சொல் வேந்தன் உறைகடுகி ஒல்லைக் கெடும்.**

இறைகடியன் என்று உரைக்கும் - அரசன் கொடுமையானவன் என்று மக்கள் கூறுகின்ற; இன்னாச் சொல் வேந்தன் - இன்னாத சொல்லை வேந்தன் உடையவனாயின்; உறைகடுகி - தான் உலகில் வாழும் ஆயுள் குறைந்து; ஒல்லைக்கெடும் - விரைந்து கெடுவான்.

அரசன் கொடுமையானவன் என்று மக்கள் கூறும் இன்னாத சொல்லை உடையவனாயின் தான் வாழும் நாள் குறைந்து விரைந்து கெடும்.

கடியன் - வினையால் அணையும் பெயர்.

**5. அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வன் பேஎய் கண்டு அன்னது உடைத்து.**

அருஞ் செவ்வி - மக்கள் காண்பதற்கு அரிய தன்மையும்; இன்னா முகத்தான் - இன்னாத முகத்தையும் உடையவனாயின்; பெருஞ்செல்வம் - அவனது பெரிய செல்வம்; பேஎய் கண்டன்னது உடைத்து - பேயால் காணப்பட்டது போன்ற குற்றம் உடையதாகும்.

மக்கள் காண்பதற்கு அரிய தன்மையும் இன்னாத முகத்தையும் உடையவனாயின் அவனது பெருஞ்செல்வம் பேயால் காணப்பட்டது போன்ற குற்றம் உடையதாகும். பயனில்லை என்பதாகும்.

பேஎய் - இசைநிறை அளபெடை

**6. கடுஞ்சொல்லன் கண்இலன் ஆயின் நெடுஞ்செல்வம் நீடுஇன்றி ஆங்கே கெடும்.**

கடுஞ்சொல்லன் கண்இலன் ஆயின் - அரசன் கடுஞ்சொல் உடையவனாகவும் இரக்கம் இல்லாதவனாகவும் ஆனால் நெடுஞ்செல்வம் - அவனது பெருகிய செல்வம்; நீடு இன்றி ஆங்கே கெடும் - நீட்டிக்காமல் அப்பொழுதே கெடும்.

அரசன் கடுஞ்சொல் உடையவனாகவும் இரக்கம் இல்லாதவனாகவும் ஆனால் அவனது பெருகிய செல்வம் நீட்டிக்காமல் அப்பொழுதே கெடும்.

**7. கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்**
**அடுமுரண் தேய்க்கும் அரம்.**

கடுமொழியும் – கடுமையான சொல்லும்; கையிகந்த தண்டமும் – எல்லை மீறிய தண்டனையும்; வேந்தன் அடுமுரண் – அரசனை வெல்லும் பகையின் முரணை; தேய்க்கும் அரம் – தேய்க்கின்ற அரம் ஆகும்.

வேந்தனின் கடுமையான சொல்லும் எல்லை மீறிய தண்டனையும் அவனது பகையினை வெல்லும் முரணைத் தேய்க்கும் அரம் ஆகும்.

**8. இனத்து ஆற்றி எண்ணாத வேந்தன் சினத்துஆற்றிச்**
**சீறின் சிறுகும் திரு.**

இனத்து ஆற்றி எண்ணாத வேந்தன் – தன்னுடைய இனமாக அமைந்த குழுவினரோடு ஆராயாது செயல்படும் வேந்தன்; சினத்து ஆற்றிச் சீறின் – கோபம் கொண்டு இனத்தாரை வெகுண்டால்; சிறுகும் திரு – அவனது செல்வம் சுருங்கும்.

தன்னுடைய இனமாக அமைந்த குழுவினரோடு ஆராயாது செயல்படும் வேந்தன் கோபம் கொண்டு இனத்தாரை வெகுண்டால் அவனது செல்வம் சுருங்கும்.

**9. செருவந்த போழ்தின் சிறைசெய்யா வேந்தன்**
**வெருவந்து வெய்து கெடும்.**

செருவந்த போழ்தின் – பகை வந்த போது; சிறைசெய்யா வேந்தன் – தடுக்க இயலாத வேந்தன்; வெருவந்து – அச்சம் கொண்டு; வெய்து கெடும் – கடிதாகக் கெடும்.

பகை வந்த போது தடுக்க இயலாத வேந்தன் அச்சம் கொண்டு கடிதாகக் கெடுவான்.

**10. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுஅல்லது**
**இல்லை நிலக்குப் பொறை.**

கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் – கடுங்கோலனாயின் அற நூல்களைக் கல்லாதவரைக் கூட்டாகக் கொள்வான்; அது அல்லது இல்லை நிலக்குப் பொறை – அது தவிர நிலத்திற்குப் பாரமாக இருப்பது வேறு இல்லை.

கடுங்கோலன் ஆனவன் அற நூல்களைக் கல்லாதவரைக் கூட்டாகக் கொள்வான்; அது தவிர நிலத்திற்குப் பாரமாக இருப்பது வேறு இல்லை.

*(தொடரும்...)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்